Regd. M. No. 5934 Phone: No. 21841

# ஜனசக்தி

ஆசிரியர்: ப. ஜீவானந்தம் JANASAKTHI
(வெளியூர் பதிப்பு)



மலர் 16 இதழ் 87] சென்னை 14-11-59 விகாரி௵ ஐப்பசிமீ 28உ சனிக்கிழமை [4 பக்கங்கள் 7 காசுகள்

# நேரு-சூயென்லாய் சந்திப்பு யோசனைக்கு சமாதானத் தலைவர்கள் வரவேற்பு

## சமாதானம் நிலைபெற சேர்ந்து நிற்போம்

## சீன-ஜப்பான் அனுக்கிரமிப்பு ஒப்பந்தம் செய்துகொள்வோம்

### சூயென்-லாய் பேச்சு

ஹாங்காங், நவ. 12—

சீனப்பிரதமர் சூஎன்-லாய் இன்று பீகிங்கில் பேசும்போது, சீனாவுக்கும் ஜப்பானுக்குமிடையே சுமுக உறவு நிலவத் தொடங்கியதும், அனுக்கிரமிப்பு ஒப்பந்தம் செய்துகொள்வதைப் பற்றி சிந்தித்துக்கொண்டிருக்கிறோம் என்று கூறினார். அவர் மேலும் பேசுகையில், இவ்வனுக்கிரமிப்பு எல்லையை தூரக்கிழக்கிற்கும் பசிபிக் கடலோரத்திற்கும் விரிவுப்படுத்தலாம் என்றார்.

ஜப்பானிய ராஜ தந்திரியும், லிபரல் ஜனநாயகக்கட்சியின்முது பெரும் உறுப்பினருமான கென்ஸோ மாட்ஸுமுரா என்பவருக்கு விடை கொடுக்கும் விருந்தின்போது சூ-என்-லாய் மேற்கூறியவாறு பேசியதாக நவசீனச் செய்தி ஸ்தாபனம் கூறுகிறது. ஜப்பானிய ராஜ தந்திரி சீனத்தை சுற்றி பார்க்கச்சென்றிருந்தார்.

சீனப்பிரதமர் மேலும் கூறியிருப்பதாவது:

சீன ஜப்பான் நாடுகளுக்கிடையே உறவு வளரத்தொடங்கியதும் வர்த்தகத்தை நிச்சயமாக அபிவிருத்திசெய்துகொள்ளலாம். இது கலாச்சாரப் பரிமாற்றத்திற்கு மேலும் ஊக்கமளிக்குமென்றார்.

மகிழ்ச்சிக்கிடையும், ஆரவாரத்திற்குமிடையும் சூஎன்-லாய் கூறியதாவது.

சீன மக்களும் ஜப்பானிய மக்களும் கரங்கோத்து தூரக்கிழக்கிலும் உலகின் இதர பாகங்களிலும் சமாதானம் நிலவ பாடுபடவேண்டுமென்ற வேண்டுகோள் தினம்தினம வலுப்பெற்று வருவதாகக் கூறினார்.

## இரு நாடுகளிடை நட்புறவு ஏற்பட எடுக்கும் முயற்சிகளுக்கு ஆசி

### பரஸ்பரம் திருப்திகரமான தீர்வில் நம்பிக்கை

புதுடெல்லி, நவ. 12—

**இந்தியப் பிரதமரும் சீனப்பிரதமரும் சந்தித்துப் பேச வேண்டும் என்ற ஆலோசனையை அகில இந்திய சமாதானக் கவுன்சில் தலைவரும் தலைசிறந்த தேசபக்தருமான பண்டிட் சுந்தர்லால் வரவேற்றுள்ளார். இந்திய சோவியத் கலாச்சார சங்கத்தின் தலைவரும் சமாதானப் பரிசு பெற்றவருமான மேஜர் ஜெனரல் ஸோக்கியும் வரவேற்றுள்ளார்.**

இரு பிரதமர்களின் சந்திப்பு வெற்றிபெற வேண்டும். இரு நாடுகளுக்குமிடையே நட்புறவு மீண்டும் ஸ்தாபிக்கப்பட வேண்டும் என்று இருவரும் ஆவல் தெரிவித்திருக்கிறார்கள்.

சீனப் பிரதமர் கடிதம் பற்றிக் குறிப்பிட்ட பண்டிட் சுந்தர்லால் 'இந்தக் கடிதம் பிரச்சினையை உதவிகரமான முறையில் அணுகியுள்ளது இதைத்தொடர்ந்து நட்புறவு முறையில் சமாதான சமரசப் பேச்சு வார்த்தைகள் நடந்து எல்லைப் பிரச்சினைக்கு இறுதியாகத் தீர்வுகாணப்பெறும் என்று நம்புகிறேன். இதில் சில கஷ்டங்கள் இருக்கலாம். ஆனால் இருபக்கத்திலும் சமரசம் வேண்டும் என்ற உணர்வு இருப்பது தெரிகிறது'' என்று கூறினார்.

#### இரண்டு அடிப்படைகள்

"இந்தக் கடிதத்தில்வெளியாகியுள்ள அடிப்படை கருத்துகள் இரண்டு. முதலாவதாக எல்லைகள் சந்திக்குமிடத்தில் படைகளை வாபஸ் பெற்று ஒரு ராணுவ சூன்யமான பிரதேசத்தை ஏற்படுத்துவது. இது நல்ல கருத்தாகும். எல்லை மோதல்கள் ஏற்படாது தவிர்க்க இது வழியமைக்கும். எல்லை மோதல்களைத் தவிர்க்க வேண்டுமென்று காங்கிரஸ் காரியக் கமிட்டி செய்துள்ள முடிவையும் நான் வரவேற்கிறேன். இந்தியாவின் பிரதேச உரிமைகளுக்குப் பாதகம் வரக்கூடாது. ஆக்கிரமிப்பை இந்தியா ஏற்றுக்கொண்டதாக வரக்கூடாது என்றும் கூறப்பட்டுள்ளது. இது பின்னால் பேச்சு வார்த்தைகள் நடத்தும்போது எடுத்துக் கொள்ளப்படலாம்'' என்றார்:

இரண்டாவதாக இரு பிரதமர்களும் சந்திப்பது எல்லைப் பிரச்சினைக்கு இறுதியான தீர்வு காண்பது இதையொட்டியுள்ள பிரச்சினைகளுக்கும் பரிகாரம் ஏற்படுத்துவதாகும். இதுவும் முக்கியமான யோசனை; உதவிகரமானதும்கூட இது அவசியம் என்றும் நான் நினைக்கிறேன் என்றார். இரு சார்பிலும் நல்லெண்ணம் இருக்கிறது என்று தாம் நம்புவதாயும் எனவே இரு சார்பினருக்கும் திருப்திகரமானதும் இந்திய-சீன நட்புறவை மேலும் பலப்படுத்துவதுமான ஒரு இறுதியான சமரசம் ஏற்படுவது சாத்தியம் என்று அவர் கூறினார்.

#### பாராட்டு

"பிரதமர் நேரு அனுசரித்து வரும் தீர்க்கதரிசனமும் யதார்த்தமுமான வெளிவிவகாரக் கொள்கைக்கு அளிக்கப்படும் பாராட்டுப் போல இருக்கிறது சீனப் பிரதமரின் நேசபூர்வமும் உதவிகரமுமான கடிதம்'' என்று ஜெனரல் ஸோக்கி கூறினார்.

இரு பிரதமர்களும் சந்தித்துப் பேச வேண்டும் என்பதை எல்லோரும் வரவேற்பார்கள். பரஸ்பரம் இரு நாடுகளும் திருப்தியடையும் முறையில் சமரசம் ஏற்படும் என்று அவர் நம்பிக்கை தெரிவித்தார்.

இவ்விரு நாடுகளுக்குமிடையே உறவில் முறிவு ஏற்படுவதால் இவ்விரு நாடுகள் மட்டுமன்றி, முழு ஆசியாவுக்கும் முழு உலகிற்குமே பாதகம் ஏற்படும் என்பதை இந்தியப் பிரதமர் நேரு உணர்வது போலவே சீனப் பிரதமர் சூஎன்-லாயும் உணர்ந்திருக்கிறார் என்பதை இக்கடிதமே எடுத்துக் காட்டுகிறது என்றார் ஸோக்கி.

#### சமாதானம் அவசியம்

ராணுவ சூன்யப் பிரதேசத்திற்கு ஒப்புக்கொள்வதால் துரதிருஷ்ட சம்பவங்கள் நேராமல் தவிர்க்கலாம் என்றும் அவர் அபிப்பிராயம் தெரிவித்துள்ளார்.

இரு நாடுகளுக்குமிடை மீண்டும் நட்புறவேற்படுத்த இரு பிரதமர்களும் எடுக்கும் முயற்சிகள் வெற்றி பெறட்டும். இந்தியா-சீனு இரு நாடுகளுக்கும் சமாதானம் இன்றியமையாதது. இருநாடுகளும் தம் மக்களுக்கு ஒரு சுபிட்ச வாழ்க்கையைக் கட்டி நிர்மாணிக்கும் பணியில் இறங்கியுள்ளன என்றார் அவர். (ஐ. பி. எ.)

## சோவியத் பத்திரிகையாளர் மகாநாடு

லண்டன், நவ. 12—

சோவியத் நாட்டின் தலைநகரான மாஸ்கோவில் அகில சோவியத் பத்திரிகையாளர் மாநாடு நடைபெற்றது. இந்த மாநாட்டில் சோவியத் பிரதமர் நிகிதா குருஷ்சேவ், ஜனுதிபதி வரோஷிலோவ் முதலிய தலைவர்கள் கலந்து கொண்டார்கள்.

பிராவ்தா பத்திரிகையின் பிரதான ஆசிரியரான பவல் சத்யுகாப் அறிக்கை சமர்ப்பித்தார். சோவியத் நாட்டில் 7686 செய்திப் பத்திரிகைகளும், 3824 சஞ்சிகைகளும் பிரசுரிக்கப்படுவதாகவும் இவற்றில் 60 ஆயிரம் பத்திரிகையாளர்கள் பணியாற்றி வருவதாயும் குறிப்பிட்டார். 1913-ல் இருந்ததை விடப் பத்திரிகை விற்பனை இப்போது 18 மடங்கு அதிகரித்துள்ளது என்றார்.

## கலாச்சாரம் பற்றிய கலைக் களஞ்சியம்

பூனு, நவ 12—

இங்கு தயாரிக்கப்பட்டு வரும் கலாச்சாரம் பற்றிய கலைக்களஞ்சிய நூல் பகுதிகளை நேற்று ஜனுதிபதி ராஜேந்திரப் பிரசாத் பார்வையிட்டார். 6000 பக்கங்களுள்ள இந்தநூலில் 3000 படங்களுக்குமேல் உள்ளன. பேராசிரியர் மஹாதேவ சாஸ்திரி ஜோஷி இதன் பதிப்பாசிரியராவார். இதற்கு ஏழு லட்சம் ரூபாய் செலவாகும் என்று தெரிகிறது. 1962ல் இந்த நூலின் ஹிந்தி, மராத்திப் பதிப்புகள் வெளியாகும்.

### தப்பி ஓடிவந்தார்



திபேத்தில் கலகம் செய்து விட்டு இந்தியாவுக்கு ஓடிவந்த கலகக் கும்பல் செல்வாக்கு வாய்ந்த புத்த சன்யாசினி துஜேபாக்மாவை நிர்ப்பந்தமாக கடத்திக் கொண்டு வந்து விட்டார்கள். இப்பொழுது இவர் திபேத்துக்கு தப்பிச் சென்று விட்டார். இன்னும் பலர் ஓடிவந்து விடுவார்களென்றும் கூறினர்.

## பொழுதெல்லாம் செல்வங்களைக் கொள்ளையடிக்கத் திட்டமா?

### தர்மகர்த்தா நாடுகளுக்கு 'கண்துடைப்பு சுதந்திரம்' தரும் மர்மம்

### சோவியத் பிரதிநிதி கண்டனம்

நியூயார்க், நவ 13—

தர்மகர்த்தா நாடுகளின் செல்வங்களைத் தொடர்ந்து சுரண்டுவதற்காக காலனி ஆதிபத்திய நாடுகள் தமது தர்மகர்த்தாப் பிரதேசங்களுக்குக் "கற்பனைச் சுதந்திரம்'' கொடுக்கின்றன. பிரிட்டன் பிரான்சு, பெல்ஜியம் ஆகிய நாடுகள் தங்கள் காலனி நாடுகளைச் சுரண்டுவதற்கு முழுமையான சுதந்திரம் அளிக்காமல் கண்துடைப்பு சுதந்திரம் கொடுக்க முன் வருகின்றன'' என்று ஐ. நா. சபையின் தர்மகர்த்தா கமிட்டியில் பேசிய சோவியத் பிரதிநிதி தோழர் மார்ட்டிரேசையான் கூறினார்.

#### கொள்ளையோ கொள்ளை!

அவர் மேலும் பேசுகையில், "காலனி ஆதிபத்திய நாடுகளின் இந்த நவீன சுரண்டல் இப்பொழுது பசிபிக் பிரதேச தர்மகர்த்தா நாடுகளில் நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. பிரிட்டன், ஆஸ்திரேலியா, நியூஜிலாந்து ஆகிய நாடுகள் தங்கள் நலனுக்காக நவுருப் பிரதேசத்திலுள்ள பாஸ்பேட் மூலகங்களையெல்லாம் அள்ளிச் செல்லுகின்றன.

#### அமெரிக்க சுரண்டல்

"இத்தாலியில் காலனி நாடாக இருக்கின்ற சோமாலிலாந்தில் ஐந்து அமெரிக்க கம்பெனிகள் உட்பட பல வெளிநாட்டுக் கம்பெனிகள் தங்கள் நிறுவனங்களை நிறுவி, அந்நாட்டின் எண்ணெய், நிலம், நாணயச் செலாவணியின் மீது ஆதிக்கம் செலுத்துகின்றன. சோமாலிலாந்து கற்பனைச் சுதந்திரம் பெற்று என்ன பயன்?

#### புதிய தந்திரம்

"ஏற்கனவே தங்கள் காலனி நாடுகளாக இருந்து சுதந்திரம் பெற்ற நாடுகளை மீண்டும் தங்கள் ஆதிக்கத்தில் வைத்துக் கொள்ள ஐரோப்பிய நாடுகள் புதிய ரூபத்தில் வலை வீசுகின்றன. அந்நாடுகளின் வாணிபத்தை ஐரோப்பியச் சந்தையோடு இணைக்க முயலுகின்றன. தங்கனீக்காவின் முன்னேற்றத்திற்கு கல்வி பொருளாதாரத் துறையில் உதவி அளிப்பதாகப் பிரிட்டன் பாசாங்கு செய்து தமது பிடிப்பை நீடித்து வைத்துக்கொள்ளவே விரும்புகிறது. அடுத்த ஆண்டு விடுதலை பெறப் போகும் பிரஞ்சு காமரூனின் நிலையும் இதுதான். காமரூனிலிருந்து பிரஞ்சுப் படைகள் வெளியேற வேண்டும். தடை செய்யப்பட்ட அரசியல் கட்சிகள் இயங்குவதை அனுமதிக்க வேண்டும்'' என்றார்.

## கோவா விடுதலைக்கு உறுதியான ஆதரவு தேவை

### இந்திய சர்க்காருக்கு திருமதி சுதா ஜோஷி வேண்டுகோள்

பூனு, நவ. 12—

இந்திய மண்ணிலுள்ள கோவா முதலிய போர்த்துக்கீசியத் திட்டுகள் அனைத்தும் விடுதலை பெறும் வரையில் இந்தியாவின் சுதந்திரம் பூரணத்துவமடையாது என்று கோவா தேசியக் காங்கிரஸின் தலைவியும் விடுதலை இயக்க வீராங்கனையுமான திருமதி சுதா ஜோஷி இங்கு கூறினார்.

கோவாவை விடுவிப்பதற்கான ஒரு புதிய போராட்டம் தொடங்கப்பட வேண்டும் என்று அவர் வலியுறுத்தினார். இத்தகைய போராட்டத்திற்கு இந்திய சர்க்கார் உறுதியான ஆதரவு நடைமுறையில் அளிக்க முன்வர வேண்டும் என்று அவர் வேண்டுகோள் விடுத்தார்.

நவம்பர் 9-ந் தேதி பூனு நகர சபை திருமதி சுதா ஜோஷிக்கு ஒரு வரவேற்பளித்தது. நகர மேயர் ஆர். வி. டெலாஸ் தலைமை வகித்தார்.

அண்மையில் சிறை மீண்ட திருமதி ஜோஷி கோவா விடுதலைப் போரில் ஈடுபட்ட தியாகிகள், தொண்டர்கள் குடும்பங்களுக்கு இந்திய மக்கள் உதவி செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொண்டார்.

## இந்திய தூதர்களுக்கு நேருவின் இரகசியக் குறிப்பு

### அமெரிக்கப் பத்திரிகை தகவல்

நியூயார்க், நவ. 13—

"சீனு தமது சரித்திரத்தில் எந்தப் பிரதேசத்தையும் தாமாக விட்டுக் கொடுத்ததுமில்லை, தம்முடைய பிரதேசம் என்று உரிமை கொண்டாடிய பிரதேசத்திலிருந்து வெளியேறியதுமில்லை. இப்பொழுதுள்ள எல்லை விஷயத்தில் சீனு இந்தியப் பிரதேசத்திலிருந்து அனுகூலம் பெற விரும்புகிறதே யன்றி, பிரச்சினையைப் பேச்சுவார்த்தையின் மூலமாகத் தீர்த்துக் கொள்ள விரும்பவில்லை'' என்று இந்தியப் பிரதமர் நேரு இந்தியாவின் வெளிநாட்டுத் தூதுவராலயங்களுக்கு எல்லை விஷயம் பற்றி அனுப்பிய குறிப்பில் கூறியிருக்கிறாராம்.

இந்தச் செயதியை அமெரிக்காவிலிருந்து வெளியாகும் "நியூயார்க் டைம்ஸ்'' என்ற பத்திரிகை வெளியிட்டிருக்கிறது.

"சீனு ஆக்கிரமித்துள்ள இந்தியப் பகுதியிலிருந்து சீனத் துருப்புக்களை வெளியேற்றுவதற்கு இந்தியா ராணுவத்தைப் பயன்படுத்தலாம்'' என்று நேரு அந்த ரகசியக் குறிப்பில் கூறியிருப்பதாகவும் "நியூயார்க் டைம்ஸ்'' எழுதியுள்ளது.

நேரு கூறியிப்பதாக அப்பத்திரிகை மேலும் கூறுவதாவது: "இந்திய-சீன எல்லை விஷயத்தில் நியாயமான உடன்பாடு ஏற்படுவதற்கான சாத்தியப்பாடுகள் அதிகமிருப்பதாகத் தெரியவில்லை. எல்லைப் பிரதேசத்தில் சீனு உரிமை பாராட்டுவது அதிகமாகிக் கொண்டு போகிறதே தவிர குறையவில்லை. லடாக் பகுதியில் இந்தியா சில பகுதிகளை சீனத்திற்கு விட்டுக் கொடுக்காவிட்டால், வடகிழக்கு எல்லைப் பகுதியில் சீனம் தொல்லை கொடுக்க ஆரம்பித்துவிடும்.''

## இலங்கை சர்க்கார் மீது நம்பிக்கையில்லாத் தீர்மானம்

### நவ. 27ந்தேதி எதிர்க்கட்சிகள் பிரேரணை

கொழும்பு, நவ. 12—

இலங்கையில் பிரதமர் பண்டார நாயகா மறைவுக்குப் பிறகு அமைந்துள்ள தஹநாயகா மந்திரி சபை மீது எதிர்க் கட்சிகள் மீண்டும் ஒரு நம்பிக்கையில்லாத் தீர்மானத்தை பிரரேபிக்க உத்தேசித்துள்ளன.

இந்தத் தீர்மானம் நவ. 27ந் தேதி பார்லிமெண்டில் வரும் நிதியமைச்சர் ஸ்டான்லி டிசொய்ஸா, வர்த்தகமந்திரி ஆர். சி. சேன நாயகா இருவர் மீதும் குற்றச்சாட்டுகள் உள்ளன. நிதி மந்திரியின் நண்பர் ஒருவர் பண்டார நாயகா கொலைவழக்கில் சம்பந்தப்பட்டிருக்கிறார் எனவும் அப்படியிருக்க அவர் பதவியிலிருப்பது வழக்கை சரிவர நடத்தப்படுவதைப் பாதிக்குமென்றும் கூறப்படுகிறது.

## இந்திய-சீனத் தகராறும் சோவியத் நாடும்

### அமெரிக்க ராஜதந்திரிகள் கருத்து

நியூயார்க், நவ. 13—

"இந்தியா-சீனு எல்லை விஷயம் இராணுவ மோதல் என்ற அளவிற்கு வளராமல் தடுப்பதற்கு சோவியத் யூனியன் என்ன செய்யப்போகிறது என்பதை இங்குள்ள ராஜதந்திர வட்டாரங்கள் ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருக்கின்றன'' என்று "நியூயார்க் டைம்ஸ்'' எழுதியுள்ளது.

"இந்திய சீன எல்லை விஷயம் பற்றி அமெரிக்க ராஜதந்திரிகளின் கருத்தை இப்பத்திரிகை வெளியிட்டிருக்கிறது. "இந்திய சீன எல்லை விஷயம் திருவதற்கான சாவி மாஸ்கோவில் இருக்கலாம். இந்திய மண்ணிலிருந்து சீன துருப்புக்களைத் திரும்பச் செல்லுமாறு செய்யும் சக்தி சோவியத் யூனியனிடம் இருக்கிறது. சீனு தமது விருப்பப்படியே இந்தியப் பகுதியை ஆக்கிரமித்திருந்தாலும், சோவியத் யூனியனின் ஆதரவின்றி நீண்ட நாட்களுக்கு ஆக்கிரமித்த பகுதியில் நிலைத்திருக்க முடியாது.''

#### உதவி அளிக்குமாம்

"அமெரிக்க குடியரசுத் தலை

(4-ம் பக்கம் பார்க்க)

## தோழர் கே. டி. கே. டில்லி பயணம்

சென்னை, நவ. 13—

**இம்மாதம் 16-ம் நாள் துவங்கும் பாராளுமன்றக் கூட்டத்தில் கலந்து கொள்வதற்காக தோழர் கே. டி. கே. தங்கமணி இன்று டில்லி புறப்பட்டுச் சென்றார்.**

## சஹாரா: அணு பரிசோதனைக்கு ஐ. நா. சபையில் கடும் எதிப்பு

நியூயார்க், நவ. 13—

சஹாராவில் பிரெஞ்சு ஏகாதிபத்தியம் அணுகுண்டுப் பரிசோதனை செய்ய விருப்பதை நிறுத்த வேண்டும் என்றுகோரும் தீர்மானத்தின்மீது ஐ. நா. சபையின் அரசியல் குழுச் கூட்டத்தில் வாக்கெடுப்பு நடைபெற்றது. இத்தீர்மானத்திற்கு ஆதரவாக 45 வாக்குகளும், எதிராக 28 வாக்குகளும் கிடைத்தன. ஒன்பது நாடுகள் வாக்கெடுப்பில் கலந்து கொள்ளவில்லை 22 ஆசிய ஆப்ரிக்க நாடுகள் கொண்டுவந்த இத்தீர்மானத்தில் சஹாரா பரிசோதனைக்காக "மிகவும் வருத்தம் தெரிவிப்பதாக'' என்றிருக்கின்ற சொற்களை நீக்கிவிடுமாறு லத்தீன் அமெரிக்கப் பிரதிநிதிகள் அபிப்பிராயம் தெரிவித்தனர். ஆனால் இந்தோனேஷியாவும், கனுவும் அவ்வாலோசனையை ஏற்றுக்கொள்ள மறுத்து விட்டன.

ஜனசக்தி

சென்னை 14-11-1959

## பிரதமரின் கவனத்திற்கு

பிரதமர் நேரு உஜ்ஜயினியில் பேசினர். சீன-இந்திய எல்லை குறித்து பிற்போக்காளர் போடும் கூச்சலுக்கு நல்ல முறையில் பதிலளித்துள்ளார். பாகிஸ்தானுடன் ராணுவக் கூட்டணியில் சேர வேண்டுமென்று கோருபவர்களை வன்மையாகக் கண்டனம் செய்தார். எல்லையில் நடந்த சாதாரண சம்பவங்களைக் கண்டதும் "ஆய் ஊய்" என்று கூக்குரலிட்டு "சலோ இமயத்திற்கு" என்று குரல் கொடுப்போரின் நடத்தையைக் குறிப்பிட்டு, "இந்தத் தமாஷைப் பார்க்க எனக்கு வேடிக்கையாக இருக்கிறது" என்று கூறி கிண்டல் செய்தார்.

இந்தியாவின் 'நடுநிலைமைக் கொள்கை'யைக் கைவிட வேண்டுமென்று கோரியவர்களையும் வன்மையாகக் கண்டனம் செய்தார்.

சோஷலிசக் கொள்கையே சிறந்தது எனவும் வாதாடினர்.

இவ்வாறு பல வரவேற்கத்தக்க கருத்துக்களை அறிவித்த பாரதப் பிரதமர் அவரது மேற்கூறிய கருத்துக்களை வரவேற்கும் ஒரே கட்சியான கம்யூனிஸ்டுக் கட்சியின் மீது ஒரு பாய்ச்சல் பாய்ந்துள்ளார்.

பிரதமர் நேருவின் பஞ்சசீலக் கொள்கையை உறுதியுடன் ஆதரிக்கும், அவர் அடிக்கடி வற்புறுத்துகிற பொதுத்துறையை உறுதியுடன் ஆதரிக்கும் கம்யூனிஸ்டுக் கட்சியைப் பற்றி பிரதமர் நேரு கூறுவதென்ன?

"எல்லை விஷயத்தில் இந்தியக் கம்யூனிஸ்டுக் கட்சி ஒரு பெரும் குழப்பத்தில் ஆழ்ந்திருக்கிறது. இதற்குக் காரணமென்ன தெரியுமா? அக் கட்சியின் வேரும், மூளையும் வெளிநாட்டிலுள்ளன. வெளியிடம் அவர்கள் ஆலோசனை கேட்கிறார்கள். எல்லா விஷயங்களிலும் இந்தியாவை ஆதரிப்பதா அல்லது மற்றொரு தேசத்தை ஆதரிப்பதா என்பது குறித்து ஆலோசித்துக் கொண்டிருக்கிறார்கள்.

"இத்தகையதொரு கட்சி இந்திய விவகாரங்களில் பெரும் பங்கு கொள்வதை நான் விரும்பவில்லை. எல்லா விதமான கட்சிகளும் இங்கு இயங்குவதற்கு நாம் அனுமதி தருகிறோம். அவைகளுக்கு நாம் எந்த விதமான தடங்கல்களும் விதிப்பதில்லை. ஆனால் இந்தியாவிற்கு வெளியே தனது மூலவேர்களைக் கொண்டுள்ள ஒரு கட்சி இந்திய விவகாரங்களில் தலையிடுவதை அனுமதிப்பதா இல்லையா என்பது குறித்து நாம் ஆழ்ந்து பரிசீலனை செய்ய வேண்டும். ஏனெனில் எந்தச் சமயத்திலும் இந்தியாவை இக் கட்சி தவறான வழியில் தள்ள முடியும். நாம் உஷாராக இருந்து இத்தகைய சம்பவம் நிகழாமல் தடுக்க வேண்டும்''

பிரதமர் நேரு நவ. 11ல் உஜ்ஜயினியில் பேசிய பேச்சு.

இந்திய நாட்டிற்கு வெளியே தனது மூலவேரையும், மூளையையும் வைத்திருக்கும் கட்சி இந்தியக் கம்யூனிஸ்டுக் கட்சி என்று பிரதமர் கூறுவது புதிதல்ல. வெகு நாட்களாக அவர் கூறிவரும் கருத்துத்தான் அது. சென்ற பொதுத் தேர்தலில் குறிப்பாகக் கேரளத்தில் பலவிடங்களில் அக் கருத்தை அவர் பரப்பிய பிறகுதான் கேரள மக்கள் கம்யூனிஸ்டுக் கட்சியை ஆட்சி பீடத்தில் அமர்த்தினர் என்பது சமீப கால நிகழ்ச்சி.

ஆனால் இன்று பிரதமர் நேரு புதிதாகக் கூறவந்துள்ள கருத்து ஒன்று உண்டு. அது இந்த நாட்டில் ஜனநாயக வாழ்வு இருப்பதா அல்லது பாசிஸ்டு சர்வாதிகார அமைப்பு உருவாகுவதா என்பது பற்றிய பிரச்னை.

இந்த நாட்டில் எல்லாக் கட்சிகளும் இருக்கலாம்; ஆனால் இந்தியக் கம்யூனிஸ்டுக் கட்சி "நம் நாட்டின் விவகாரத்தில் தலையிட அனுமதிப்பது பற்றி ஆழ்ந்து பரிசீலனை செய்ய வேண்டும்" என்று பிரதமர் நேரு பேசியிருப்பதுதான் புதிய கருத்து. இதன் பொருள் என்ன?

ஜனசங்கமும், பெரு முதலாளிகளும் கம்யூனிஸ்டுக் கட்சியைத் தடை செய்ய வேண்டுமென்று கோருகின்றனரல்லவா? தனியார் துறை முதலாளிகளையும் வகுப்புவாதக் கட்சிகளையும் எவ்வளவுதான் கடுமையாகப் பிரதமர் நேரு சொல்லளவில் தாக்கிப் பேசிய போதிலும் நடைமுறையில் அவர்களது கோரிக்கையை ஏற்க முன் வருவதையே இது காட்டுகிறது.

ஜனசங்கம் மோசமானது; பெரு முதலாளிகள் மோசமானவர்கள். ஆனால் அவர்களது கொள்கை சிறந்தது. வரவேற்கத் தக்கது என்று பிரதமர் நேரு கருதுகிறாரா?

கம்யூனிஸ்டுக் கட்சியை இந்த நாட்டின் உள்விவகாரத்தில் தலையிடாமல் தடுப்பது குறித்துப் பேச வந்த பிரதமர் கூறும் காரணம் என்ன?

இந்திய-சீன எல்லை விஷயத்தில் இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி இந்தியாவை ஆதரிக்கிறதா அல்லது சீனாவை ஆதரிக்கிறதா என்று யோசித்துக் கொண்டிருக்கிறதாம். இவ்விதப் போக்கு இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியில் இந்தியத் தன்மை இல்லாததையே காட்டுகிறதென்று நேரு கூறுகிறார்.

பண்டித நேருவின் புதல்வியும் காங்கிரஸ் தலைவருமான இந்திரா காந்தி இன்னும் எட்டிய வேகமாகப் பாய்ந்துள்ளார்.

"ருஷ்யக் கம்யூனிஸ்டுகள் ருஷ்யர்களாக இருக்கிறார்கள், சீனக் கம்யூனிஸ்டுகள் சீனர்களாக இருக்கிறார்கள்; ஆனால் இந்தியக் கம்யூனிஸ்டுகள் இந்தியர்களாக இல்லை. கொச்சியில் ஒரு கப்பல் தளம் அமைத்தால், அதை இந்தியாவின் பாதுகாப்பிற்காக உபயோகிப்பார்களா என்பது சந்தேகமே" என்று இந்திரா காந்தி பேசினர்.

தந்தையும், மகளும் இன்று வற்புறுத்திக்கூற முன் வந்துள்ளது இந்தியக் கம்யூனிஸ்டுகள் இந்தியர்களல்ல என்பதாகும்.

எல்லை விஷயந்தானே இன்று இத்தனை ஏச்சுப் பேச்சிற்கும் காரணமாக உள்ளது? நாம் வினவுகிறோம் பிரதமரையும் அவரது புதல்வியையும், இந்தியாவின் எந்தப் பகுதியை சீனத்திற்கு விட்டுக்கொடுக்க வேண்டுமென்று கோரினோம்? இந்தியாவிற்குச் சொந்தமான பகுதி எது? இத்தனைகாலமாக நம் கையில்இருந்து வந்த பகுதிகள் எவை? இந்திய அரசாங்கத்தின் உத்தரவுகள் இதுகாறும் அமுல் நடத்தப்பட்டு வந்த எல்லையை ஒட்டிய நமது பிரதேசங்கள் எவை?

அவைகளை எவருக்கும் விட்டுக் கொடுத்துவிட வேண்டுமென்று இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி கூறுகிறதா? என்றாவது கோரியதுண்டா? இல்லையே.

நமது பிரதேசங்கள் எதையும் விட்டுக்கொடுக்க வேண்டியதில்லை; அதேசமயத்தில் சீன அரசாங்கம் இந்தியாவுடன் சமரசமாகப் பேசித் தீர்க்க விரும்புகிறது. சீன அரசாங்கம் மேற்கத்திய ஏகாதிபத்திய அரசுகளைப் போன்ற ஒரு ஏகாதிபத்திய நாட்டின் அரசாங்கமல்ல; அது ஒரு சோஷலிஸ நாட்டின் அரசாங்கம்; மேலும் சென்ற 2000 ஆண்டுகளாக அந்த நாட்டுடன் நமக்கு எவ்வித சச்சரவும் இருந்ததில்லை; இந்தியாவும் சீனாவும் நட்புடன் வாழ்வது உலக சமாதானத்திற்கும் ஆசிய – ஆப்பிரிக்க மக்களின் சுதந்திரத்திற்கும் பேருதவியாக இருக்கும், எனவே இரு நாடுகளின் பிரதமர்களும் பேச்சுவார்த்தை மூலம் சச்சரவுக் குரித்தான விஷயங்களைப் பேசித் தீருங்கள் என்றுதானே இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி கூறுகிறது?

இக்கொள்கையில் எந்தப் பகுதி, எந்த அம்சமாவது நமது தேசத்திற்கு விரோதமானதென்று பண்டித நேருவோ இந்திரா காந்தியோ கூற முடியுமா?

இக்கொள்கையைத் தவறென்று உங்களால் கூறமுடியாது. இது இந்திய மக்களின் நலனை அடித்தளமாகக் கொண்டுள்ள கொள்கை.

கம்யூனிஸ்ட் கட்சியின்மீது உங்களுக்கு நீண்டகால வெறுப்பு ஒன்று உண்டு. நேருவின் தலைமையிலுள்ள அரசாங்கத்தின் பெரு முதலாளி ஆதரவுக் கொள்கையையும் மக்கள் விரோதப் போக்கையும் உறுதியுடன் எதிர்ப்பது, கம்யூனிஸ்ட் கட்சியே. உங்களது ஊழல்களையும் மக்கள் விரோதப் போக்கையும் மனப்பூர்வமாக கம்யூனிஸ்ட் கட்சி ஆதரித்திருந்தால் இன்று இத்தனை கோபம் எழுந்திராது. அத்தகைய ஜன விரோத பாதையில் கம்யூனிஸ்ட் கட்சி செல்லுமென்று நீங்கள் என்றைக்கும் எதிர்பார்க்கவே முடியாதே!

இறுதியாகஒன்று, சட்டவிரோதமாக்கி விடுவேன் என்ற கூறும் பிரதமர் நேருவின் மறைமுக மிரட்டலுக்குக் கம்யூனிஸ்ட் கட்சி பயந்து தொடை நடுங்கி விடும் என்று எதிர்பார்ப்பீரானால் அதுதான் நடக்காது என்று வினயமாக எடுத்துக் கூற விரும்புகிறோம்.

கம்யூனிஸ்ட் கட்சி இருப்பதும், அது வளருவதும் உங்களது தயவின் காரணமாக அல்ல என்பதை நீங்கள் புரிந்து கொள்ள வேண்டும்.

முன்பு ஒரு தரம் நீங்கள் சட்ட விரோதமாக்கிப் பிறகுதான் கேரளத்தில் அதிகார பீடமேறினோம். இன்று மீண்டும் உங்களது கைவரிசையைக் காட்ட விரும்பினால் கம்யூனிஸ்டுகள் வெற்றி உங்களுடையதல்ல என்பதை மட்டும் இன்றே கண்ணாடி சூத்திரத்திலிருந்து தெரிந்து கொள்ளுங்கள்.

# காங்கிரஸ் உருவாக்கிய பூதம் பலிகடா கோருகிறது

[கே. முத்தையா]

எந்த வல்லரசுகளுடனும் ராணுவ அணி வகுப்பில் சேராதிருத்தல், எல்லா அரசுகளுடனும் நட்புறவுடன் வாழுதல், எல்லா நாடுகளிடமிருந்தும் பரஸ்பர நலன் என்ற அடிப்படையில் பொருளாதார உறவு கொள்ளுதல்; பிற நாடுகளின் உள் விவகாரங்களில்தலையிடாதிருத்தல்;சகல விதமான சர்வதேசப் பிரச்னைகளையும் பேச்சுவார்த்தையின் மூலமே பேசித் தீர்த்தல்—இதுவே இத்வரை பிரகடனப்படுத்தப்பட்டு வந்துள்ள இந்தியாவின் அன்னிய நாட்டுக் கொள்கை.

இதை நடுநிலைமைக் கொள்கை என்றும் கூறுவர்.

இதை எவ்வளவு தூரம் நடைமுறையில் இந்திய அரசாங்கம் அமுல் நடத்தியது, அல்லது அமுல்நடத்தத்தவறியது என்பது பரிசிலனைக்குரிய ஒரு விஷயம். ஆனால் இக்கொள்கையே இந்திய நாட்டின் நிலைமைக்கு மிகச் சிறந்தது, பொருத்தமானது, இலாபகரமானது என்று சென்ற பல ஆண்டுகளாக இந்தியத் தலைவர்கள் வற்புறுத்தி வருகின்றனர்.

### பஞ்சசிலத்தின் பரம்பரை

பஞ்சசீலம் என்ற கொள்கை சீனப் பிரதமரைச் சந்தித்த பிறகு உருவானதல்ல; அது இந்தியாவிற்கே உரித்தான கலாச்சார பரம்பரையில் பிறந்தது; புத்தர் வழி பிறந்தது; நம்மிடையே வாழ்ந்து மறைந்த காந்திஜியின் போதனையில் பிறந்தது என பண்டித நேரு அவர்கள் நமக்கு அடிக்கடி நினைப்பூட்டி வருகிறார்.

### புதிய தாக்குதல்

ஆனால் இந்தக் கொள்கையின் மீது சென்ற சில மாதங்களாகக் கடுமையான தாக்குதல்கள் தொடுக்கப்பட்டுள்ளதை நாம் அறிவோம். அயூப்கான் இந்தியப் பிரதமரைச் சந்திப்பதற்கு பல நாட்களுக்கு முன்பிருந்தே, திம்மையா சம்பவம் நிகழ்வதற்கு முன்பே, தலாய்லாமாவை இந்தியாவிற்குள் வரவேற்பதற்கு முன்பே இந்தத் தாக்குதல் தொடுக்கப்பட்டது. உள் நாட்டில் பொதுத்துறையின் மீதும், நமது வெளிநாட்டுக் கொள்கையின் மீதும் இந்தத் தாக்குதல் இந்தியப் பெரு முதலாளிகளால் சிறு சிறு விமர்சன ரூபத்தில் தோன்றி வளர்ந்தது. இன்று அது சுதந்திரக் கட்சி உருவத்தில் தோன்றியுள்ளது.

இன்று நமது வெளி நாட்டுக் கொள்கையையே மாற்ற வேண்டும்; பிரதம மந்திரி நேரு ராஜினாமாச் செய்யவேண்டும்; பாதுகாப்பு மந்திரி கிருஷ்ண மேனன் ராஜினாமாச் செய்ய வேண்டும்; நம் நாட்டைப் பாதுகாக்கும் விதத்தில் ஒரு யுத்த மனப்பான்மையை உருவாக்க வேண்டும்'' என்று பம்பாயில் நடந்த பிரஜா சோஷலிஸ்ட் மகாநாட்டில் எச். வி. காமத் அறைகூவினர். இந்திய-சீன எல்லையைக் குறிப்பிட்டு விட்டு பெரு முதலாளி ஜி. டி. பிர்லா இந்திய அரசாங்க அமைப்பையே மாற்றியமைக்க தமது சகபாடிகளுக்கு அறைகூவல் விடுத்துள்ளார்.

இந்த அளவிற்கு இந்தியாவின் வெளிநாட்டுக் கொள்கை மீது தாக்குதல் தொடுக்கப்பட்டுள்ளது.

### பாசிஸ்டுப் பாணியில்

பிரஜாசோஷலிஸ்டுகளோ இத்துடன் நின்றுவிடவில்லை. மீரத்தில் கூடியிருக்கும் இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் தேசியக் கவுன்சில் கூட்டமே நடக்காமல் செய்ய கலவரங்களை தூண்டவும் முன்வந்துள்ளனர். கம்யூனிஸ்ட் கட்சி இந்த நாட்டில் இருக்கக் கூடாது என்று கூறுமளவிற்கு வந்துள்ளனர். கம்யூனிஸ்ட் கட்சியின் உரிமைக்குப் பங்கம் விளைவிக்கும் நோக்கத்துடன் ஜனசங்கம், ஹிந்து மகாசபை ஆகிய வடிகட்டிய வகுப்புவாதப் பிற்போக்காளருடன் அணிவகுத்து நின்று கவுன்சில் கூட்டம் நடந்த இடத்தின்மீது கல்லெறியவும் கூச்சலிடவும் முன்வந்துள்ளனர். காரணம் என்ன? இவர்களுக்கு இவ்வளவு தெம்பு எங்கிருந்து தோன்றியது?

இந்தியாவின் வெளிநாட்டுக் கொள்கையை அடியோடு மாற்ற வேண்டுமென்று கோருவதும், சட்டபூர்வமாக இயங்கும் ஒரு அரசியல் கட்சியின் பிரஜா உரிமையின் மீது பாசிஸ்டு தாக்குதல் தொடுத்துள்ளதும் ஒன்றுக்கொன்று நெருங்கிய தொடர்புடைய சம்பவங்கள். ஓரே சங்கிலியின் இரு அங்கங்கள்.

கம்யூனிஸ்டுக் கட்சியைத் தாக்குவதற்காக உருவாக்கிய காங்கிரசின் பிரச்சார வீள் இன்று காங்கிரசையே வெட்டி வீழ்த்துவதற்கு பயன்படுத்தப்படுகிறது.

பூதத்தை உருவாக்கிய மந்திரவாதி அதன் பசியைத் தீர்க்க முடியாது தத்தளிக்கிறார். ஆனால் பூதம் விடுமா? அதன் பசி தீர வேண்டுமே! மந்திரவாதியையே உணவாகக் கோருகிறது பூதம்! பிரதமர் நேருவையே பலிபீடத்தில் ஏற்றவேண்டுமென்கிறது, பிரதமர் நேருவின் வெளிநாட்டுக் கொள்கையையும் அதை ஆதரிக்கும் கட்சிகளையும் நபர்களையும் அழித்து ஒழிக்க வேண்டுமென்கிறது பிரஜா சோஷலிஸம்!

அசோக மேத்தாவிற்கும், எச். வி. காமத்திற்கும், எம். ஆர். மசானிக்கும், ஜெயப்பிரகாஷ் நாராயணனுக்கும் உலகம் போற்றும் இந்தியாவின் வெளிநாட்டுக் கொள்கையை மாற்றவேண்டுமென்றும், நேரு ராஜினாமாச் செய்யவேண்டுமென்று கோருமளவிற்குத் தைரியம் வரக் காரணமென்ன?

### புகலிடம்; வரவேற்பு

திபேத்தில் எத்தகைய சீர்திருத்தமும் கூடாதென்று சீன அரசாங்கத்தை எதிர்த்துக் கலகம்செய்து விட்டு தப்பி இந்தியாவிற்குள் ஓடி வந்தனர் தலாய்லாமாவும் திபேத்திய அடிமை எஜமானர்களும். நிலப்பிரபுக்களும், அவர்களது பரிவாரங்களும் ஏன் இங்கு வந்தார்கள்? இங்கு வந்தால் அவர்களுக்கு நல்ல வரவேற்புக் கிடைக்குமென்று முன்கூட்டியே தெரியும். அதேபோல் அந்தக் கலகக்காரர்களுக்கு ராஜோபசாரத்துடன் இங்கு வரவேற்பும் கிடைத்தது. பிர்லாவின் முசோரி பங்களாவில் தலாய் தங்குவதற்கும் இட வசதி செய்து கொடுக்கப்பட்டது. ஓடிவந்த 12 ஆயிரம் கலகக்காரர்களுக்கும் ஆண்டுதோறும் ரூ. 10 லட்சம் செலவழிக்கவும் நமது பட்ஜெட்டில் ஒதுக்கப்பட்டது.

பிரதமர் நேருவே தலாய் லாமா தங்கி இருந்த இடத்திற்குச் சென்று அவரை வரவேற்றார். இதன் பிறகு கேட்பானேன்? பிரஜா-சோஷலிஸ்டுக் கட்சியும், ஜனசங்கமும், ஹிந்து மகா சபையும் இந்தியாவின் பஞ்சசீலக் கொள்கையின் மீது கடுமையான தாக்குதல் தொடுக்க ஆரம்பித்தன.

நாம் பேசுவது பஞ்சசீலம் பிற நாட்டின் உள்விவகாரத்தில் தலையிடாமை; ஆனால் நடந்து கொண்டது என்ன? நமது அண்டை நாட்டில் கலகம் செய்தவர்களுக்கு வரவேற்பு அளித்தல்!

இந்த முரண்பாட்டின் விளைவுதான் இன்று பிற்போக்காளரின் தாக்குதல்.

திபேத் சீனாவின் ஒரு பகுதி என்பதை நாம் அங்கீகரித்திருந்தும், நடைமுறையில் திபேத் மீது நமது அரசாங்கம் மிகுந்த அக்கறை கொண்டுள்ளது என்பதைக் காட்டிக்கொள்ள முன்வந்ததுதான் இன்று நேருவின்கொள்கை மீது பி. சோ—ஜனசங், சுதந்திரக் கட்சி—கரியப்பா கூட்டணி தாக்குதல் தொடுத்திருப்பதற்குக் காரணம்.

ஜெயப்பிரகாஷ் நாராயண் தெளிவாகக் கூறுகிறார்.

"தலாய்லாமாவிற்கு நாம் இடம் கொடுத்ததினால்தான் சீனா நம்மீது ஆக்கிரமிப்பு நோக்கம் கொண்டுள்ளது என்று நினைப்பது தவறு. தலாய்லாமா லாசாவில் (திபேத்தில்) இருந்த சமயத்திலேயே சீனாவின் ஆக்கிரமிப்பு துவங்கிவிட்டது".

ஜெயப்பிரகாஷ் பம்பாயில் நவ. 10-ல் பேசியது:

திபேத் சீனாவின் பகுதி அல்ல; அங்கு சீனத்தின் துருப்புகள் வருவது ஒரு ஆக்ரமிப்புச் செயல் என்கிறார்ஜெயப்பிரகாசர். ஆனால் இந்தியாவின் கொள்கை எது? திபேத் சீனாவின் பகுதி என்பதாகும். சீனாவின் ஒரு பகுதியில் சீன அரசாங்கம் கலகக்காரர்கள் மீது நடவடிக்கை எடுத்தால் அது ஆக்ரமிப்பு ஆகிவிடுமா? ஷேக்அப்துல்லா கலகத்தின் போது காஷ்மீருக்கு இந்தியத்துருப்புக்களைக் கொண்டு சென்றது. இதே ரகமான நடவடிக்கை எடுக்கத்தானே! இதற்கு பதில் கூறமாட்டார் ஜெயப்பிரகாசர்.

பஞ்சசீலத்திற்கு முரண்பாடாக இந்திய அரசாங்கம் தலாய்லாமா விவகாரத்தில் நடந்துகொண்டதின் விளைவு இது.

### பூதத்தின் திருவிளையாடல்

இரண்டாவது, பிரதமர் நேரு இந்தூருக்கு வந்தபோது இருநூறு ஜனசங் தொண்டர்கள் 'கிருஷ்ணமேனனை டிஸ்மிஸ் செய், சௌ-என்-லாய் ஒழிக' என்று கோஷமிட்டு வரவேற்றார்களாம்.

நேருவின் ராஜ்யமான உத்தர பிரதேசத்தில் சமீபத்தில் நடந்த நகரசபைத் தேர்தலில் சீனா ஆக்ரமித்து விட்டதாகக் கூறி காங்கிரஸ்காரர்கள் தீவிரமாகப் பிரச்சாரம் செய்து நாட்டைப் பாதுகாக்க காங்கிரசிற்கு ஓட்டுப் போடும்படி கோரினராம். தேர்தலில் காங்கிரஸ் மைனாரிடியாகி ஜனசங்கிற்கு மற்ற கட்சிகளைவிட மிக அதிகமான ஸ்தானங்கள் கிடைத்தன.

"சீனா ஆக்ரமிக்கும் என்பதை, ஏ! காங்கிரசே நீயே ஒப்புக்கொள்கிறாய்! ஆனால் ஆக்ரமிப்பிலிருந்து இந்த நாட்டைப் பாதுகாக்க உன்னால் முடியாது! ஜனசங்கினால் தான் முடியும். எனவே மக்களே ஜனசங்கிற்கே ஓட்டு தாரீர்!" என ஜனசங் பிரசாரகர்கள் சேரி வெற்றிபெற்றனர்.

ஆக்கிரமிப்புப் பூதத்தை உருவாக்கிய காங்கிரஸ் அந்த பூதத்திற்கே இரையாகிய இரண்டாவது உதாரணம் இது.

### காங்கிரசின் புதிய தீர்மானம்

இந்த ஆபத்தை ஓரளவு உணர்ந்து, திடுக்கிட்டு காங்கிரஸ் காரியக் கமிட்டி நவம்பர் 10-ந் தேதி 'சமாதானத் தீர்மானம்' நிறைவேற்றியுள்ளது.

"எல்லையில் மோதல்களைத் தடுக்கத்தக்க நடவடிக்கைகள் எடுக்க வேண்டும். எல்லா நாடுகளுடனும் குறிப்பாக அண்டை நாடுகளுடன் நேசஉறவுகொள்வதே இந்திய அரசின் உறுதியான கொள்கையாகும். தகராறுக்குரிய எந்த விஷயத்தையும் பேச்சுவார்த்தையின் மூலம், சமாதான வழியில் தீர்ப்பதையே இந்தியா விரும்புகிறது".

காங்கிரஸ் காரியக் கமிட்டி தீர்மானம் நவ. 10.

வரவேற்கத்தக்க இந்தத் தீர்மானத்தின் வழியே இந்திய அரசாங்கத்தின் நடைமுறை இந்திய-சீன எல்லை விவகாரங்கள் ஆரம்பமான காலத்திலிருந்தே இருந்திருக்குமானால், இன்று பண்டித நேருவின் பார்வையின் முன்னாலேயே ஜனசங்கின் வால் இவ்வளவு நீளம் வளர்ந்திருக்காது; காங்கிரஸிற்கு படுகேவலமான நிலைமை உ. பி. யில் ஏற்பட்டிருக்காது!

இன்று பிரதமர் நேரு சீனாமீது படை எடுக்கவேண்டுமென்று கோருபவர்களையும், அவ்விதபடை எடுப்பிற்காக பாகிஸ்தானுடன் ராணுவக் கூட்டணியில் சேர வேண்டும் என்று கோருபவர்களையும் வன்மையாகக் கண்டிக்க முன்வந்துள்ளார். தாமே சிருஷ்டித்த பூதத்தை ஒழிக்க வேண்டிய பணியை எதிர்நோக்கியுள்ளார். இப்பணியில் ஈடுபடும் அவருக்கு கம்யூனிஸ்டுகள் உள்ளிட்ட சகல முற்போக்காளர்களின், சமாதானவாதிகளின் ஆதரவும் நிச்சயம் கிடைக்கும்.

இறுதியாக ஒன்று.

கேரளத்தில் உருவான ஒரு ஜனநாயக ஆட்சியை சட்டவிரோதமாகக் கவிழ்த்த பிறகு, இந்திய நாடு முற்றிலும் மிகப் பயங்கரமான உணவு நிலைமை உருவான பிறகு காங்கிரஸ் அனுஷ்டிக்கும்கொள்கையால் மக்களிடையே அதிருப்தியும் ஆத்திரமும் ஓங்கிவளரும் இச்சமயத்தில், தலாய்லாமா இந்தியாவில் வரவேற்கப்பட்ட நிகழ்ச்சியும், இந்திய-சீன எல்லை குறித்து பூதாகாரமான வெறிப் பிரச்சார நிகழ்ச்சியும் நடந்துள்ளன என்பதை மட்டும் யாரும் மறந்துவிடக்கூடாது.

இவ்வாறு குறிப்பிட்டதொரு சூழ்நிலையில் உருவாக்கப்பட்ட மேற்கூறிய பூதம் காங்கிரஸையே அழித்துவிடும் அபாயம் ஏற்படுத்தியிருப்பதைக் காங்கிரஸ் காரியக் கமிட்டிஉணர முன்வந்திருப்பதை வரவேற்கிறோம்.

இழிவான, சந்தர்ப்பவாதக் கம்யூனிஸ்ட் எதிர்ப்பைக் கைவிட்டு விட்டு, இன்று நம் முன் உள்ள எல்லைப் பிரச்சனைகளை சுமுகமாக தீர்க்க முன் வரும்படி வேண்டுகிறோம்.

அது ஒன்றே ஜனசங்கின் பயங்கர சொரூபத்தையும், பி. சோ. வின் வெறித்தனத்தையும் தடுத்து நிறுத்தும்.

## ஆட்குறைப்பு செய்யத் தடை

## வெள்ளைக் கம்பெனிகள் மீது இலங்கை சர்க்கார் நடவடிக்கை

கொழும்பு, நவ. 12—

கொழும்பு நகரிலுள்ள இரு வெள்ளைக்காரக் கம்பெனி நிர்வாகிகள் தொழிலாளர்களை ஆட்குறைப்புச் செய்து விலக்குவதை தடை செய்து அவசரகாலச் சட்டப்படி நடவடிக்கை எடுத்துள்ளது இலங்கை சர்க்கார்.

300 தொழிலாளர்களை விலகும்படி நோட்டீஸ் கொடுத்திருந்தது இந்த நிர்வாகம். இந்த நோட்டீசை வாபஸ் பெறவேண்டும் என பிரதமர் தஹநாயகா கோரினார். நான்கு மாதங்களுக்கு ஒத்தி வைக்க வேண்டுமென்றார். நிர்வாகம் சம்மதிக்கவில்லை. எனவே இந்த அவசரகாலச் சட்டப் பிரகாரம் சர்க்கார் ஆட்குறைப்பைத் தடுத்து நடவடிக்கை எடுத்துள்ளது.

அவசரகாலச் சட்டம் நிலவும் போது தொழிலாளர் வேலை நிறுத்தம் செய்ய முடியாது. அதே போல முதலாளிகளும் உள்ள நிலைமையை பாதிக்கும் எந்தச் செயலையும் செய்யக் கூடாது என்று சர்க்கார் அறிவித்துள்ளது.

உணவு, பானகம், தேயிலை, ரப்பர், தென்னைப் பொருள்கள் உற்பத்தி, ஏற்றுமதி வேலைகளை அத்தியாவசியத் தொழில் என்று பிரகடனம் செய்திருப்பது தெரிந்தது.

# நாடும் நடப்பும்

## சர்வோதயமும் ஜெயப்பிரகாசரும்

கூட்சி அரசியலுக்கு முழுக்குப் போட்டுவிட்டு ஸ்ரீமான் ஜெயப்பிரகாஷ் நாராயணன் சர்வோதய இயக்கத்தில் குதித்தார். இப்பொழுது எல்லையைக் காக்க தொடை தட்டி கோதாவில் குதித்திருக்கிறார். சென்ற வாரம் பி. சோ. கட்சியின் வெள்ளி விழா மாநாட்டு மேடையில் மீண்டும் குதித்து, எல்லையைக் காக்க தமது மாஜி சீடர்களுக்கு அழைப்பு விடுத்திருக்கிறார். ஒன்று படையெடுக்க வேண்டும்; அல்லது சாந்தி சேனையாகச் செல்ல வேண்டும்! இது ஜெயப்பிரகாசர் போதனை.

கேரளக் கலவரத்தின்போது சாந்தி சேனை செல்க என்று ஸ்ரீமான் சர்வோதயத் தலைவர் உத்தரவிட்டார். கம்யூனிசம் சம்பந்தப்பட்டது ஏதாவது ஒரு சம்பவமென்றால் அவருக்கு அவ்வளவு உணர்ச்சி

ஒரு சந்தேகம்! பாகிஸ்தான் இந்த எல்லையில் சுட்டுக்கொண்டேயிருந்தது. அப்பொழுதெல்லாம் ஜெயப்பிரகாசரின் ரத்தம் கொதிக்கவில்லை. துகர்கிராம் என்ற இந்திய கிராமத்தையே பாகிஸ்தான் விழுங்கியது. அப்பொழுதெல்லாம் அகிம்சா வீரர் 'போர்க்கோலம்' பூணவில்லை! இந்திய விமானமே சுட்டு வீழ்த்தப்பட்டது ஜெயப்பிரகாசர் வாய்திறக்கவேயில்லை! இந்தியா-பாகிஸ்தானத்திற்கு ஏற்பட்டுள்ள பிரச்சினைகளைவிட இன்றைய எல்லை விஷயம் பெரிய பிரச்சினை அல்ல. பேசித் தீர்த்துக்கொள்ள வேண்டிய, தீர்த்துக் கொள்ளகூடியபிரச்னை. இருந்தும் ஜெயப்பிரகாசர் இமயமலையில் ஏறும்படி தமது சீட கோடிகளுக்குப் பணித்துள்ளார்.

ஜெயப்பிரகாசர் கம்யூனிச எதிர்ப்புக் கண்ணாடியிலேயே உலகத்தை கண்டவர். அவர் சர்வோதய இயக்கத்தில் ஏன் இருக்கிறார் என்பதுதான் நமது கேள்வி.

★

### வளர்க பாரத உணர்ச்சி!

இந்திய எல்லையைப் பாதுகாக்க சீனாவின் மீது படையெடுக்க வேண்டுமென்று சில தி. மு. க. நண்பர்களும் மார்தட்டுவதாகக் கேள்விப்படுகிறோம். சீனாவிஷயத்தில் வடஇந்தியப்பிற்போக்காளர்களுடன் என்ன ஒற்றுமை பாருங்கள்! வாழ்க தி.மு.க.வின் பாரத் உணர்ச்சி! வளர்க ஐக்கிய உணர்வு!

★

### கரியப்பாவின் அபூர்வ ஆலோசனை

எல்லையைக்காக்க கிளம்பியிருக்கும் இன்னொரு வீரர் மாஜி தளபதி கரியப்பாவாகும்! காஷ்மீர் பகுதியிலுள்ள இந்திய ராணுவத்தை வாபஸ் வாங்கி சீன எல்லையில் நிறுத்த வேண்டுமென்று அபூர்வ ஆலோசனை கூறியுள்ளார். இவரது கருத்திற்கு பி. சோ. கட்சி தாளம் போடுகிறது; சுதந்திரக் கட்சி ஒத்து ஊதுகிறது! நேற்றுவரை பாகிஸ்தானோடு "புனித யுத்தம்" என்று பல்லவி பாடி வந்த ஜனசங்கம் ஜால்ரா தட்டுகிறது! இந்தியா பாகிஸ்தானோடு ராணுவ ஒப்பந்தம் செய்துகொள்ள வேண்டும், ராணுவக் கூட்டணியில் சேர வேண்டுமென்று இந்தியாவிலுள்ள அமெரிக்க தேசபக்தர்கள் ஆட்டம் போடுகிறார்கள். இவர்களுக்கெல்லாம் நேருவே பன்முறை சுடச்சுட பதிலளித்து விட்டார். எனவே நாம் கூறத் தேவையில்லை. நேற்றுவரை பாகிஸ்தான் இந்தியாவிற்கு விரோதமாகப் பிரச்சாரம் செய்து வந்ததை மறந்துவிட முடியாது! கரியப்பாவிற்கும் அயூப்கானுக்கும் கடிதத் தொடர்பு இருப்பதையும் மறந்துவிட முடியாது! உங்கள் நண்பனைப் பார்த்தே உங்களைத் தெரிந்து கொள்ள முடியாதா?

—துருவன்.

## சோவியத் விமானத் தொழிலாளர் தூதுகுழு

சென்னை, நவ. 11—

சோவியத் நாட்டின் விமானத் தொழிலாளர் சங்கத்தின் சார்பில் மூவர் கொண்ட ஒரு தூதுக் குழு இந்தியாவுக்கு வந்துள்ளது. இந்தக் குழுவினர் இன்று சென்னை வந்துள்ளனர். இந்திய விமானத் தொழிலாளர் சங்கத்தின் அழைப்பை ஏற்று வந்துள்ள நட்புறவு, தூதுக் குழுவே இது. இதன் தலைவராக அலக்ஸி வந்துள்ளார்.

# ஆசிரியருக்குக் கடிதங்கள்

### பஞ்சமும்-வரிவசூலும்

ஐயா,

இராமநாதபுரம் ஜில்லா, சிவகங்கைத் தாலூகாவின் தென்பகுதியில் 2 வருடம் கடுமையான, மக்கள் பஞ்சத்தில் கஷ்டப்பட்டு வாழமுடியாமல், உள்ளதுஉரியது அனைத்தையும் விற்று வெளியூர்களில் கூலிகளாகச் சென்று வாழ்கின்றனர்.

இந்த நிலைமையில் வரி வசூலிக்கிறவர்கள், வீட்டையும், பொருட்களையும் ஜப்தி செய்யும் நிலைமை ஏற்பட்டுள்ளது, அரசாங்கம் ஏழை விவசாய மக்கள் படும் அவதியை உத்தேசித்து, ஏழைகளின் பொருட்களை ஜப்தி செய்யாமலிருக்க அதிகாரிகளுக்கு உத்தரவு பிறப்பிக்குமாறு வேண்டிக் கொள்கிறேன். அல்லது பஞ்சப் பிரதேசத்தில் வரி வஜாவுக்கு ஏற்பாடு செய்யுமா?

எஸ். ஆர். கிருஷ்ணன்,
சிவகெங்கை.

●

### ரேடியோ சங்கீத (அ)நீதி!

ஐயா,

தமிழ் நாட்டிலுள்ள ரேடியோ நிலையங்களில் நல்ல சங்கீதத்தை கேட்பதே அநீதியாகிவிட்டது. கொஞ்ச வருடங்களுக்கு முன்னால் ரேடியோ டைரக்டர்களே பாடகர்களைத் தேர்ந்தெடுத்தார்கள். கொஞ்சம் நல்ல சங்கீதத்தையும் கேட்க முடிந்தது. இப்பொழுதோ சங்கீத உற்பத்தியாளர்களுக்கு Mu ic Producers) ஆயிரக் கணக்கில் சம்பளம் கொடுத்து பாடகர்களைத் தேர்ந்தெடுக்கச் செய்கிறார்கள். இப்போது சுவாரஸ்யமாகப் பாடக்கூடியவர்களுக்கு இப்போது ரேடியோவில் ஆதரவு இல்லாமல் போய்விட்டது. சுருதிக்கும், பாட்டுக்கும் சம்பந்தமில்லாத சங்கீத உற்பத்தியாளர்களுக்குக் கொடுக்கும் சம்பளத்தில் 30 கச்சேரிகள் நடத்தி விடலாம்.

ரேடியோவில் மாத சம்பளம் வாங்கும் பக்கவாத்தியக்காரர்கள் கூட ஒழுங்காகப் பாடல்களுக்கு வாசிப்பது இல்லை.

பொதுமக்களின் பணத்தை இவ்வாறு விரயம் செய்வது சரியல்ல. ரேடியோ அதிகாரிகள் இதைக் கவனித்து நல்ல பாடகர்களைத் தேர்ந்தெடுத்து இந்த அநீதியைத் தவிர்க்க முன்வரும்படி கேட்டுக்கொள்கிறேன்.

ராமன்,
சென்னை.

●

### கொல்லிமலை வாசிகள் அவதி

ஐயா,

சேலம் ஜில்லா நாமக்கல் தாலூகா கொல்லிமலையில் வசிக்கும் மக்கள் ஆஸ்பத்திரி வசதி இல்லாமல் அல்லற்படுகிறார்கள். முப்பது வருடகாலமாக இருந்து வந்த மிஷன் ஆஸ்பத்திரி கூட மூடப்பட்டு விட்டது. இந்தப் பகுதியில் வாழும் சுமார் 50 ஆயிரம் மக்கள் காசநோய், மலேரியா முதலிய காய்ச்சல் நோய்கள் இவற்றால் வாடுகிறார்கள். மருந்து கிடைக்க வழியின்றிக் கஷ்டப்படுகிறார்கள். சர்க்கார் உடனடி கவனம் செலுத்தி ஓர் ஆஸ்பத்திரியை நிறுவ நடவடிக்கை எடுக்க வேண்டும்.

டி. கே. தம்பி,
கொல்லிமலை.

●

### நெல்லை கலெக்டர் கவனிப்பாரா?

ஐயா,

திருநெல்வேலி ஜில்லா திருச்செந்தூர் தாலூகா கீழத்திருச்செந்தூர் கிராமத்தில் சர்க்காருக்குச் சொந்தமான புறம்போக்கு நத்தம் புஞ்சை நந்தவனம் போன்ற நிலங்கள் உள்ளன. வீடிழந்து திண்டாடும் ஏழை மக்கள் வீட்டு மனைகேட்டு மனுப் போட்டு ஒரு மாமாங்கமாகியும் கவனிக்கப்படவில்லை. இதே சமயத்தில் பணம் [illegible] இந்த நிலங்க[illegible] கொள்ள மு[illegible] கிறது. சரியாக சர்வே நடத்தி அத்துமீறி நிலத்தைப் பிடித்துள்ளோரை வெளியேற்றி ஏழை மக்களுக்கு நிலமளிக்க அதிகாரிகள் முன்வர வேண்டும்.

எம். சுப்பையா,
திருச்செந்தூர்.

●

### தபால் பெட்டி மீண்டும் வந்தது

ஐயா,

அரியலூர் கம்யூனிஸ்ட் கட்சி ஆபீஸ் முன் தபால் பெட்டி வைக்கப்பட்டிருந்தது. சில காங்கிரஸ்காரர்கள் விஷமத்தனத்தால் அது அகற்றப்பட்டது. இது பற்றி ஜனசக்தியில் கடிதம் வெளிவந்தது. பிறகு ஜில்லா தபால் அதிகாரிக்கும் கடிதம் எழுதியிருந்தேன். தவறை உணர்ந்த அதிகாரி பழைய உத்தரவை ரத்தாக்கி 9-11-59ல் மீண்டும் தபால் பெட்டி வைக்கப்பட்டுள்ளது. தபால் அதிகாரி வருத்தம் தெரிவித்துக் கடிதமும் எழுதியுள்ளார். இதற்கு நன்றி.

ஏ. ஆர். சீனிவாசன்
அரியலூர்.

●

### போஸ்டர்கள் வைக்கக் கூடாதாம்!

ஐயா,

உணவு இயக்கம் சம்பந்தமாக போஸ்டர்கள் பலவற்றை நம்பியூரிலுள்ள கடைவீதியில் பல கடைகளில் தொங்க விட்டிருந்தோம். ஆனால் நம்பியூர் போலீஸ் சப் இன்ஸ்பெக்டரும் போலீஸாரும் 8-11-59-ல் இரவு இத்தட்டிகளை எடுத்துக்கொண்டு போய் போலீஸ் ஸ்டேஷனில் வைத்துக் கொண்டார்கள். 11 11 59-ல் நேரில் போய்க் கேட்டபோது அவற்றைத் திருப்பிக் கொடுக்க மறுத்ததோடு போஸ்டர்கள் வைக்கக் கூடாது என்றும் கூறினார்கள்.

சேட் செல்லப்பகவுண்டர்,
நம்பியூர்.

## சர்வகட்சி விலைகுறைப்புக் கமிட்டி

### பொன்னேரி தாலூகாவில் அமைப்பு

பொன்னேரி, நவ. 11—

9-11-59 தேதி மாலை 3 மணி அளவில் பொன்னேரியில் தாலூகா சர்வ கட்சி விலை குறைப்பு அமைப்புக் கமிட்டிக் கூட்டம் தோழர் கே. பாலகிருஷ்ணன் தலைமையில் கூடியது,

கூட்டத்தில் தி.மு.க. கம்யூனிஸ்ட் கட்சி, தாலுக்கா விவசாயிகள் சங்கம், தாலுக்கா ஓட்டல் தொழிலாளர் சங்கம், தாலுக்கா சலவைத் தொழிலாளர்கள் சங்கம் ஆகிய ஸ்தாபனங்களின்பிரதிநிதிகள் கலந்து கொண்டார்கள்.

மக்கள் வாங்கும் உணவுப் பண்டங்களின் விலைவாசி உயர்ந்திருப்பதை விளக்கியும் இம்மாதம் சென்னையில் அமைக்கப்பட்ட சர்வகட்சி விலைகுறைப்பு கமிட்டி நிறைவேற்றிய தீர்மானங்களை விளக்கியும் பேசப்பட்டது.

9 பேர்களைக் கொண்ட தாலுக்கா சர்வகட்சி விலைகுறைப்புக் கமிட்டி அமைக்கப்பட்டது.

கமிட்டி உறுப்பினர்கள் பின்வருமாறு:—கே. சம்மந்தன், சி. கே. மாணிக்கம், டி. வி. தம்பையா (கம்யூனிஸ்டு கட்சி), மு. கேசவன், ஆர். சந்திரசேகரன், ஏ. நடராஜன், (தி.மு.க.) என். எம். ஆறுமுகம் (தாலூகா விவசாயிகள் சங்கத் தலைவர்), கே. பாலகிருஷ்ணன், (தாலூகா ஓட்டல் தொழிலாளர்கள் சங்கம்) ஏ. சி. துரைசாமி தாலுகா சலவைத் தொழிலாளர் சங்கம்)

மேற்படி கமிட்டியின் கன்வீனர்களாக தோழர்கள் கே. சம்பந்தம் (கம்யூனிஸ்ட் கட்சி), ஆர். சந்திரசேகரன் (தி.மு.க.) தேர்ந்தெடுக்க பட்டனர்,

சர்வகட்சி விலைகுறைப்புக் கமிட்டி நிறைவேற்றிய தீர்மானத்தின் அடிப்படையில் இயக்கம் நடத்துவது என்று முடிவு செய்யப்பட்டது.

—ந.கி.

# மக்களின் வாழ்க்கையை உயர்த்த மந்திரிகள் கவலைப்படுகிறார்களா?

### திருச்சியில் சர்வகட்சி அமைப்பு நடவடிக்கை

திருச்சி, நவ. 9—

இன்று நாதன் கம்பெனியில் இரவு 9 மணிக்கு தி.மு.க. காரியதரிசி எம். எஸ். மணி, கம்யூனிஸ்ட் கட்சியின் சார்பில் கே.பி. எஸ். கோன், தமிழரசுக் கழகத்தின் சார்பில் அப்பர்சாமி ஆகியவர்கள்கூடி, 11-11-59க்குள் சகல அரசியல் கட்சிகளையும் அணுகி, கட்சி ஊழியர்கள் கொண்ட கூட்டத்தைக் கூட்டி விலைவாசி உயர்வைக் குறைக்கும் முறையில் இயக்கம் நடத்துவதுபற்றி திட்டங்கள் போடவேண்டும் என்று தீர்மானித்தார்கள்.

## பாலதண்டாயுதம் மன்ற துவக்க விழாவில் வி. பி. சிந்தன் பேச்சு

சென்னை, நவ. 12—

'சந்திரனுக்கு ருஷ்யர்கள் ராக்கெட் விட்டு, சந்திரனின் மறுபக்கத்தைப் படம் பிடித்து வெளியிட்டதைப் பற்றி நேருவும் ஜனாதிபதியும் அப்பிப்பிராயம் கூறுகையில், "நாம் சந்திரனுக்கும் சூரியனுக்கும் ராக்கெட் விட விரும்பவில்லை இந்த நாட்டு மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதில் தான் நாங்கள் கவலை செலுத்தி வருகிறோம்" என்றார்கள். அவர்கள் கவலைப்படுவது உண்மை தானு? உண்மையானல் கடந்த 12 வருட ஆட்சியில் மக்களின் வாழ்க்கை எந்த அளவு உயர்ந்திருக்கிறது?" என்று 10-11-59-ல் சிந்தாதிரிப் பேட்டையில் துவக்கப்பட்டுள்ள பால தண்டாயுதம் மன்றம் திறப்பு விழா பொதுக்கூட்டத்தில் தமிழக கம்யூனிஸ்ட் தலைவர் தோழர் வி. பி. சிந்தன் கேள்விகளை எழுப்பி அமைச்சர்களின் சால்ஜாப்புகளுக்கு ஆணித்தரமான பதில்களும் அளித்தார். கூட்டத்துக்கு தோழர் என். லோகநாதன் தலைமை வகித்தார். தோழர் சி. ஏ. வெங்கடேஸ்வரலு மன்றத்தைத் திறந்து வைத்தார்.

### வி. பி. சிந்தன்

ஆரம்பத்தில் தோழர் வி.பி.சிந்தன்பேசுகையில், "1939-ல் பால தண்டாயுதம் தலைமையில் நடைபெற்ற அண்ணாமலைப் பல்கலைக் கழக மாணவர் போராட்டங்களையும், காலஞ்சென்ற சீனிவாச சாஸ்திரியாருடன் நடத்திய சொற்போர்களையும், அவரது சிறை வாழ்வு, மக்கள் சேவை, ஆயுள்தண்டனை, ஆகியவை பற்றியும், உருக்கமாக விளக்கிய பின், உணவு நிலைபற்றி மேலும் பேசினார்.

### கவலைப்படுவது உண்மையா?

"ராக்கெட் பற்றி கவலையில்லை, மக்களின் வாழ்க்கை பற்றிதான் கவலைப்படுகிறோமென்று கூறுகிறார்களே, இவர்களுடைய 12 வருட ஆட்சியில் 2 திட்டங்கள் நிறைவேறியும்கூட, வேலையில்லாத் திண்டாட்டம் முன்னைவிட அதிகமாகிக் கொண்டேயிருக்கக் காரணமென்ன? விலைவாசி உயர்வு ராக்கெட் வேகத்தில் பறந்து கொண்டேயிருக்கக் காரணமென்ன?

பிச்சைக்காரர் தொகையும், பிளாட்பார வாழ்க்கையும் மலிந்துகொண்டே யிருக்கக் காரணம் என்ன?

அரிசி விலை ஏறிவிட்டதே என நாம் கூக்குரல் போட்டால், விலைவாசி உயர்வு நாட்டின் சுபீட்சத்தைக் காட்டுகிறது என்கிறார் பண்டித நேரு. உண்மையில் நாமெல்லாம் செழித்துக் கொழுத்து விட்டோமா? நீங்களே பதில் கூறுங்கள். (வெட்கம், வெட்கம்.)

புளி விலை ஏறியது ஏன் என்று கேட்டால், 'புளிய மரத்தை வெட்டிவிட்டார்கள், அதனால் தான்' என்கிறார் காமராஜர். இந்த ஒருவருடத்துக்குள்ளாகவா எல்லா மரங்களையும் வெட்டிவிட்டார்கள்? யாரை ஏய்ப்பதற்கு இந்தப் பேச்சு? (சிரிப்பு.)

சர்க்கரை சாப்பிட்டால் மாரடைப்பு வரும் என்கிறார் வைத்திய மந்திரி மாணிக்கவேலர். ஆனால் அவரது வீட்டில் சர்க்கரை உபயோகப்படுத்துவதில்லையா, உபயோகப்படுத்தியிருந்தால் மாரடைப்பினால் எத்தனை பேர் செத்துவிட்டார்கள் என்று நீங்கள் திருப்பிக் கேட்டுவிடாதீர்கள். கேட்டால் உங்களை தேசத் துரோகியென்றும் பீகிங் கூலி என்றும் கூறிவிடுவார்கள்!

### நேருவின் வாய்ச் சவடால்

கள்ளமார்க்கெட் கொள்ளைலாபக்காரனை மின்சாரக் கம்பத்தில் தூக்கிலிடுவேன் என்று கர்ஜித்தார் நேரு. இன்று அவர் பிரதமமந்திரி.சகல அதிகாரமும்அவரிடம் உள்ளன. ஒருவரையாவது தூக்கிலிட்டாரா? தூக்கிலிடக் கூடவேண்டாம், சிறையிலாவது அடைத்தாரா? கிடையாது. அத்தனை பேரையும் காங்கிரஸில் சேர்த்துக்கொண்டார். அநேகரை எம்.பி.களாகவும் எம்.எல்.ஏ.களாகவும், காங்கிரஸ் கமிட்டித் தலைவர்களாகவும் ஆக்கிக் கொண்டார்கள். (வெட்கம், வெட்கம்)

நான் பேசினால் சுருக்கெழுத்துக்காரர்களை அனுப்பி எழுதிக் கொள்ளுகிறார்கள், எங்கள் கட்சி ஆபீஸில் யாருடனாவது நாங்கள் பேசினால், அவற்றை டேப் ரிக்கார்டு செய்து கொள்ளுகிறார்கள். ஆனால் யார் எத்தனை மூட்டை நெல், எத்தனை மூட்டை சர்க்கரை, எங்கு வைத்திருக்கிறார்கள் என்று பார்க்க அரசாங்கம் முன்வருவதில்லை. காரணம் என்ன? ஏகபோக தானியக் கொள்முதல் செய்து கொள்ளையடிக்கும் எம். ஏ. முத்தையா செட்டியார், பூண்டி வாண்டையார் வலிவலம் தேசிகர் போன்றவர்கள் காங்கிரஸ்காரர்கள்.

### கான்பூரும் நேருவும்

உணவுப் பொருள் விலைவாசிகளைக் குறைக்குமாறு அமைதியாக ஆர்ப்பாட்டம் செய்த வங்க மக்களை காங்கிரஸ் சர்க்கார் சுட்டது. 80 பேர்கள் மாண்டு மடிந்தார்கள் துரதிர்ஷ்ட வசமாக ஒரு போலீஸ்காரரும் இறந்து விட்டார். அந்த ஒரு போலீஸ்காரருக்காக நேரு குடம் குடமாய்க் கண்ணீர்வடித்தார். 80 பேருக்கு அனுதாபம் தெரிவித்து ஒரு வார்த்தைகூட பேசவில்லை. (வெட்கம் வெட்கம்)

அதுதான் போகட்டும். கான்பூரில், சட்டத்தையும் அமைதியையும் பாதுகாக்க ஏற்படுத்தப் பட்டிருக்கும் போலீஸ் ஸ்டேஷனில், ஒரு ஹெட்கான்ஸ்டேபிள் ஒரு பெண்ணைக் கற்பழித்தார். கண்டித்த பொதுமக்கள் மீது துப்பாக்கிப் பிரயோகம் செய்து 15 பேர்களைக் கொன்றார்கள். செத்து வீழ்ந்த 15 பேர்களுக்கு அனுதாபம் தெரிவிக்க வேண்டுமென்று நான் நேருவைக் கேட்கவில்லை. அக்கிரமமாகக் கற்பழிக்பட்ட அந்த பெண்ணுக்காக அனுதாபம் தெரிவித்து பண்டித நேரு ஒரு வார்த்தையாவது பேசினாரா?" என்று சிந்தன் கேட்டபோது வெட்கம் வெட்கம் என்று மக்கம் குரல் எழுப்பினர்.

பின்னர், வரவிருக்கும் விலைவாசிக் குறைப்பு அறப்போர் பற்றியும் இந்திய-சீன எல்லைப் பிரச்சினை சமரசமாகத் தீர்க்க வேண்டிய அவசியம் பற்றியும் விளக்கமாகப் பேசி முடித்தார். இறுதியில் தோழர் ஐ. மாயாண்டி பாரதி பேசிய பின் கூட்டம் கலைந்தது.

### கோயிலாபுரத்தில் கட்சிக்கிளை துவக்கம்

பெரியகுளம், நவ. 12—

கோயிலாபுரம் கம்யூனிஸ்ட் கட்சிக்கிளை அமைப்புக் கூட்டம் தோழர் ஆர். கோவிந்தராசு தலைமையில் நடைபெற்றது. தாலுகா கமிட்டி உதவிச் செயலாளர் தோழர் வி. அப்துல்காதர் அரசியல் நிலைமை குறித்து விளக்கம் தந்தார்.

பின்னர் தோழர் ஆர். கோவிந்தராசு கிளைச் செயலாளராகவும். தோழர் பி. சின்னச்சாமி துணைச் செயலாளராகவும், தோழர் கா. வீராச்சாமி பொருளாளராகவும் தேர்ந்தெடுக்கப் பட்டனர்.

## தங்கவயல் தொழிலாளரின் போனஸ் கோரிக்கை

### சங்கங்களின் கூட்டுமுயற்சி டிச. 4-ல் ஒருநாள் வேலைநிறுத்தம்

கோலார், நவ. 10—

தங்கவயலிலுள்ள ஏ. ஐ. டி. யு. சி., ஐ. என். டி. யு. சி. சங்கங்களின் பிரதிநிதிகள், மைசூர் மைன் ஒர்க்கர்ஸ் யூனியனில் 5-11-59-ல் கூடி தொழிலாளர்களின் போனஸ் பிரச்சினையில் தீர்வு காண்பதற்கான வழிவகைகளை ஆராய்ந்தனர். 1956 நவம்பர் 29 முதல் 16 மாதங்களின் வரவு செலவு கணக்குப்பட்டியலை தங்கச் சுரங்க கம்பெனியார் வெளியிட்டதை ஆராய்ந்தனர். தேய்மானம், புனரமைப்பு, வட்டி மான்யம் போன்ற இனங்களில் மொத்த லாபத்திலிருந்து சுமார் ரூ. 78 லட்சத்திற்கு மேலான தொகையை ஒதுக்கி போனஸ் தர பணமில்லை யென கம்பனி செய்துள்ளனர்.

யார் கைவிரிப்பு செய்வதை அனுமதிக்கப் போவதில்லை, தொழிலாளர்களுக்கு நியாயமான போனஸ் வழங்கச் செய்வதற்கான கிளர்ச்சியை கூட்டாக நடத்துவதென முடிவு செய்துள்ளனர்.

போனஸ் பிரச்சினை பற்றிய கொள்கைக்கான கூட்டு அறிக்கையொன்று இச்சங்கங்கள் சேர்ந்து வெளியிட்டுள்ளன.

போனஸ் பிரச்சினைக்காகவும் உணவு தானிய விலைவாசியைக் கட்டுப்படுத்தக் கோரியும், ஆர்ப்பாட்ட-கிளர்ச்சியை அடையாளமாகக் கொண்ட தினமாக டிசம்பர் 4-ல் ஒரு நாள் வேலை நிறுத்தம் செய்வதெனவும் முடிவு செய்துள்ளனர்.

# பண்டத்தை பதுக்கி இருக்கும் இடத்தை காட்டுகிறோம் கொள்முதல் செய்வீர்களா?

## காரமடை உணவு இயக்க கூட்டம்

### கோவைத் தோழர் அப்புவின் பேச்சு

மேட்டுப்பாளையம், நவ. 10—

இங்நகரை அடுத்து இருக்கும் காரமடையில் கடந்த 8-11-59-ல் விலைவாசி உயர்வைக் கண்டிக்கும் முறையில் உணவு இயக்கப் பொதுக் கூட்டமொன்று காரமடை 'ஜனநாயக வாலிபர் சங்க'த்தின் சார்பில் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. ஆரம்பத்தில் படி அரிசி 12 அணுவிற்கு வேண்டும் என்பன போன்ற உணவுக் கோஷங்களுடன் ஊர்வலமொன்று சங்கக் கட்டிடத்திலிருந்து புறப்பட்டு பிரதான வீதிகள் வழியே வந்து 'புல்லுக்கடை' மைதானத்தை அடைந்தது. அங்கு ஜனநாய வாலிபர் சங்கத் தலைவர் கிருஷ்ணன் தலைமையில் பொதுக்கூட்டம் ஆரம்பமாயிற்று.

கூட்டத்தில் கலந்து கொண்டு பேசிய கோவை ஜில்லா விவசாய சங்கத் தலைவர் எல். அப்பு அவர்கள் இன்றைய தினம் நாட்டில் ஏற்பட்டுள்ள உணவு நெருக்கடி பற்றியும் அதற்கான காரணங்கள் பற்றியும், அதிலிருந்து மீள, கம்யூனிஸ்டுக் கட்சி முன் வைத்துள்ள ஆக்க பூர்வமான ஆலோசனைகள் பற்றியும் விளக்கமாக எடுத்துரைத்தார்.

உணவு நெருக்கடி உண்டாவதற்குக் காரணம் கேரளத்திற்கு அரிசி போவதுதான் என்று அமைச்சர்கள் வாதித்தனர்.

நாம் சொன்னோம்; கடந்த பத்துப் பதினைந்து ஆண்டுகளாகவே கேரளத்திற்கு அரிசி போய்க் கொண்டிருக்கிறது என்று. ஆனாலும் அவர்கள் மறுத்தனர். போகட்டும். அரிசி கேரளத்திற்குப் போவதாலேயே விலை ஏறிவிட்டது என்றே வைத்துக் கொள்வோம். ஆனால், புளி விலையுங்கூட இன்றைய தினம் ஏறிக் கொண்டே போகிறதே இதற்கென்ன காரணம்? புளியுங் கூடவா கேரளத்திற்கு அனுப்பப் படுகிறது" என்று நகைபடக் கேட்டார்.

மேலும், அவர் விலை ஏற்றத்திற்கான காரணம் பற்றிக் குறிப்பிடுகையில் "இன்றைய தினம் அரிசிவிலை உயர்ந்துகொண்டே போவதற்குக் காரணம் உற்பத்திக் குறைவினாலல்ல" என்றார் அவர். "இதை மந்திரியே ஒப்புக் கொள்ளுகிறார். சென்ற ஆண்டைக் காட்டிலும் அதிகமான உணவு விளைச்சல் உண்டாகியிருப்பதாக நமது உணவு அமைச்சர் ஸ்ரீமான் பக்தவச்சலம் அவர்களே ஒப்புக்கொண்டிருக்கிறார். அப்படியானால் இந்த விலைவாசி உயர்வுக்குக் காரணமென்ன?

என்ற கேள்வியை எழுப்பி "நாட்டில் உணவுப் பஞ்சம் ஏற்படுவதற்குப் பெரும் நிலப்பிரபுக்களும் வியாபாரிகளுமே காரணம்' என்றார். மேலும் அறுவடை சமயத்தில் பெருமளவுக்குக் கொள்முதல் செய்து வைத்துக் கொண்டு பின்னர் அதைத் தங்கள் இஷ்டம்போல விலை உயர்த்தி விடுவதே காரணம்" என்றார்.

சர்க்காரே உணவு தானியத்தைக் கொள்முதல் செய்யப் போவதாக அறிவித்தபோது மக்கள் பெரிதும் சந்தோஷப் பட்டனர். குறைந்த விலையில் நல்ல அரிசி கிடைக்குமென்று அவர்கள் எதிர் பார்த்தனர். ஆனால் சர்க்காரோ பிற்பாடுதாங்களே நேரடியாகக் கொள்முதல் செய்யப் போவதில்லை என்றும் மொத்த வியாபாரிகளிடமிருந்தே கொள் முதல் செய்யப் போவதாகவும் தெரிவித்தனர். இதன் மூலம் சர்க்கார் தங்கள் கொள்கையை விட்டுவிட்டு வர்த்தகச் சூதாடிகளிடம் சரணடைந்துவிட்டனர்" என்றார்.

மேலும், நியாயவிலைக் கடை பற்றிக் குறிப்பிடுகையில் தற்சமயம் திறந்திருக்கும் ஆயிரத்துக்கும் சற்று அதிகப்படியான கடைகள் நிச்சயம் போதாது என்றார். மேலும் இது விஷயத்தில் கம்யூனிஸ்டுகள் கேரளத்தை ஆண்ட போது அவர்கள் உணவு விஷயத்தில் கடைப்பிடித்த கொள்கைகளை தமிழக சர்க்காரும் பின்பற்ற வேண்டுமென வற்புறுத்தினார்.

வருகிற 22ந் தேதியன்று தமிழகம் பூராவும், பி.சோ. கட்சி நீங்கலாக எல்லாக் கட்சிகளும் பிரம்மாண்டமான ஆர்ப்பாட்டம் நடத்தப் போகின்றனர். அந்த சமயத்தில் பொதுமக்களனைவரும் அந்த போராட்டத்திற்கு ஆதரவு தந்து வெற்றி பெறச்செய்ய வேண்டுமெனக் கேட்டுக்கொண்டார்.

மேட்டுப்பாளையம் தோழர்களான எம். கே. கருப்பண்ணன், எம். ஈ. மாஸ்தண்ணன் ஆகியோர் விலைவாசி உயர்வின் காரணமாக மக்கள் படும் அவதிபற்றியும் உணவுப்போராட்டத்தின் அவசியம்பற்றியும் தெளிவாக விளக்கி பேசினர். கூட்டத்தை காரமடை பி. சென்னியப்பன் ஆரம்பித்து வைத்தார்.

## வெள்ளிப் பேழையை ஏற்க நேரு மறுப்பு

உஜ்ஜயினி, நவ. 11—

உஜ்ஜயினி நகரசபையின் சார்பில் பிரதமர் நேருவுக்கு வரவேற்பளிக்கப்பட்டது. வரவேற்புரை ஒரு வெள்ளிப் பேழையில் வைத்துத் தரப்பட்டது. நான் தங்கம் வெள்ளி எதையும் ஏற்பதில்லை. எதற்கு இதெல்லாம் என்று பேழையை வாங்க நேரு மறுத்து விட்டார். இது கலைச் சிறப்பு மிக்கது என்று கூறப்பட்டபோது கலையைப் பார்த்து ரசித்தாகிவிட்டது பேழை வேண்டாம் என்று கூறிவிட்டார்.

## கேரள சமாஜக் கூட்டம்

சென்னை, நவ. 3—

மதராஸி கேரள சமாஜம் சூளை கிளையின் சார்பாக ஐக்கிய கேரள தினம் கொண்டாடப்பட்டது.

திரு. ஆர். காரோலி தலைமை வகித்தார். குழந்தைகளுக்கு இனிப்பு வழங்கப்பட்டது.

## சர்வகட்சி விலைக் குறைப்புக் குழு தூத்துக்குடியில் அமைக்கப்பட்டது

தூத்துக்குடி, நவ. 9—

தூத்துக்குடியில் கம்யூனிஸ்ட், தி.மு.க., தமிழரசுக் கழகம், தொழிற் சங்கங்கள் சார்பில் உணவு விலை குறைப்பு கமிட்டி ஒன்று நிறுவப்பட்டது.

கம்யூனிஸ்ட் கட்சி அலுவலக ஹாலில் இக்கட்சிகளின் பிரதிநிதிகள் கூட்டம் நடைபெற்றது. உணவுப் பண்டங்கள் விலை உயர்ந்துள்ளதுபற்றியும் அரசாங்கம் மவுனம் சாதிப்பதுபற்றியும் பிரதிநிதிகள் விவாதம் செய்தனர்.

முடிவில் கம்யூனிஸ்ட் கட்சியின் சார்பாக தோழர்கள் சி. ஆ. முருகானந்தம், பயில்வான் அருணாசலம், எம். நடராஜன் ஆகியோரும், தி.மு.க. சார்பில் எம். எஸ். சிவசாமி, ஜோசப். பீ சண்முகம் ஆகியோரும், தமிழரசு கழகச் சார்பில் அருணாசலம் மற்றும் இருவர்களும் தொழிற்சங்கங்களின் சார்பில் எஸ். நடராசன், பீற்றர் முராயிஸ், சீதையம்மாள், தங்கம்மாள் மற்றும் பலரைக் கொண்ட சர்வ கட்சிக் கமிட்டி அமைக்கப்பட்டது.

விரைவில் இந்தக் குழு தீவிரமாக செயல்படத் துவங்கும்.

—ந.கி.

### கோவை ஜில்லா காங்கிரஸ் கமிட்டி தலைவர் தேர்வு

கோவை, நவ. 10—

கோவை ஜில்லா காங்கிரஸ் கமிட்டித் தலைவராகத் திரு. பி. ஆர். கந்தசாமி செட்டியார் (பொள்ளாச்சி) தேர்ந்தெடுக்கப் பட்டார். இதுவரை திரு எஸ். என். ஆர். சின்னசாமி நாயுடு தலைவராகப் பதவி வகித்து வந்தார்.

### ராஜு சோடா பாக்டரியில் தொழிலாளர் கிளர்ச்சி

சென்னை, நவ. 10—

மயிலை கள்ளுக்காரன் தெருவில் (83வது வட்டம்) நவ. 9ந் தேதியன்று நடைபெற்ற ஒரு கூட்டத்தில் தோழர்கள் ரமணியும், மாயாண்டி பாரதியும் ராஜு சோடா பாக்டரி கம்பனியில் வேலை செய்த தொழிலாளிகளை பாக்டரி முதலாளி பழிவாங்கியதைக் கண்டித்தும், உணவு விலையேற்றத்தைக் கண்டித்தும் பேசினர்.

### வாழப்பாடியில் உணவு இயக்கக் கூட்டம்

வாழப்பாடி, நவ. 5—

சேலம் ஜில்லா வாழப்பாடியில் கம்யூனிஸ்ட் கட்சிப் பொதுக் கூட்டம் 26-10-59-ல் தோழர் வி. எம். ஆனந்தன் தலைமையில் நடைபெற்றது,

தோழர்கள் எஸ். இராமச் சந்திரன் சேலம் வகாப், எஸ். எம் சி. இராமையா ஆகியோர் பேசினர்

பட்டுக்கோட்டை கல்யாண சுந்தரம், பழனி தாலூகா வெங்கடாசலம் மறைவுக்கு அனுதாபம் தெரிவித்தும், படி அரிசி 12 அணுவிற்குத் தரக் கோரியும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

### ஹோட்டல் தொழிலாளிக்கு ரூ.250 நஷ்டஈடு

திருச்சி, நவ. 10—

திருச்சி, இந்தியன் ஸ்டால் உரிமையாளர் அந்த ஹோட்டலில் வேலை செய்யும் முத்து என்ற தொழிலாளியை சட்ட விரோதமாக நீக்கி விட்டார். மதுரை தொழிற் கோர்ட்டில் தொழிற் சங்கம் தாக்கல் செய்த புகாரின் பேரில் நிர்வாகம் முத்துவுக்கு ரூ. 250 நஷ்டஈடு கொடுக்க வேண்டும் என்று தீர்ப்புக் கூறியது.

### பி. யு. சி. செப்டம்பர் 1959 எஸ்.டி.சி.யில் தேர்வு விகிதம் 93 சதம்

மதுரை, நவ. 11—

1959 செப்டம்பரில் நடந்த புகுமுக வகுப்புப் பரீட்சையில், மதுரை ஸ்டுடன்ட்ஸ் டுடோரியல் கல்லூரியில் பயின்று பரீட்சை எழுதிய மாணவர்களில், ஆங்கிலத்தில் 93 சதவிகிதமும், தமிழில் 90 சதவிகிதமும், மூன்றுவது பாகத்தில் 91 சதவிகித மாணவர்களும் தேர்ச்சி பெற்றுள்ளனர். (ந. கி.)

# உணவுப் பொருள் விலைகளைக் குறைக்க தமிழகமெங்கும் இயக்கக் கூட்டங்கள்

### கோவை

கோவை, நவ. 10—

விலைவாசி உயர்வுக் கண்டன சைக்கிள் ஊர்வலம் நடைபெற்றது. நகரின் முக்கிய சாலைகளில் 150-க்கு மேற்பட்ட சைக்கிள்களுடன் தொண்டர்கள் ஊர்வலமாக வந்தனர். நகர கம்யூனிஸ்ட் கட்சிக் கிளை ஊர்வலத்திற்கு ஏற்பாடு செய்திருந்தது.

### குடவாசல்

தோழர் கே. ராஜாங்கம் தலைமையில் உணவு இயக்கப்பொதுக் கூட்டம் நடைபெற்றது. தோழர்கள் ஆறுமுகம், டி. சாமிநாதன், ஜீ. வீரய்யன் பேசிய பின்னர் மாநில கம்யூனிஸ்ட் கட்சியின் கவுன்சில் உறுப்பினர் தோழர் கே. ஆர். ஞானசம்பந்தன் விலைவாசி உயர்வு குறித்தும், உணவு இயக்கம் பற்றியும் விரிவாகப் பேசினார்.

### பாப்பநாயக்கன் பாளையம்

கோவை பாப்பநாயக்கன் பாளையத்தில் கம்யூனிஸ்ட் கட்சிக் கிளையின் சார்பில் தோழர் பி. சங்கரன் தலைமையில் உணவு இயக்கப் பொதுக்கூட்டம் நடைபெற்றது. தோழர்கள் எஸ், கருப்புசாமி, ஜி. ராமசாமி, டி. பாலன் ஆகியோர் பேசினார்கள்.

### சென்னிமலை

கட்சிக் கிளையின் சார்பாக உணவு இயக்க சைக்கிள் ஊர்வலம் நடைபெற்றது. சென்னிமலையில் இதுபோன்ற சைக்கிள் ஊர்வலம் இதுவரை நடைபெற்றதில்லை.

### கடலூர் (ஓ. டி.)

செல்லங்குப்பம் கிளையின் சார்பில் தோழர் பி. அமிர்தலிங்கம் தலைமையில் உணவு இயக்கப் பொதுக்கூட்டம் நடைபெற்றது. தோழர்கள் கே. வேணுகோபால், எஸ். நடராசன் ஆகியோர் பேசினார்கள்.

### சோழவந்தான்

விலைவாசி உயர்வு எதிர்ப்பு சர்வ கட்சி கமிட்டி அமைப்புக் கூட்டம் தோழர் கே. மாணிக்கம் தலைமையில் நடைபெற்றது சர்வ கட்சிப் பிரதிநிதிகளும் கூட்டத்தில் கலந்துகொண்டனர். பின்னர் தோழர் என். ஆறுமுகம் (பு.தொ க.) தலைவராகவும், வீ. செங்குட்டுவன் (தி மு.க.) துணை தலைவராகவும், கே. மாணிக்கம் (கம்.) செயலாளராகவும், வி. குருநாதன் (த.நா.சோ.) துணைச் செயலாளராகவும், ஏ. என். ஸ்ரீராமுலு (த அ. க.) பொருளாளராகவும் கொண்ட சர்வ கட்சி கமிட்டி அமைக்கப் பட்டது. எஸ். எஸ். சுப்பிரமணியம் (கம்.), பா. வேலன் (தி.மு. க.), எம். துரைசாமி (த.அ.க,), எம். பரமசிவம் (த. நா. சோ.) கே. ராமகிருஷ்ணன் (பு. தொ. க.) ஆகியோரும் அங்கம் வகிக்கிறார்கள்.

16—11—59 மதுரை மாவட்ட கலெக்டரைப் பேட்டி கண்டு உணவு மகஜர் சமர்ப்பிப்பது என்றும், 22-11-59-ம் நாள் பொதுக்கூட்டம், ஆர்ப்பாட்டம் நடத்துவதென்றும் முடிவு செய்யப்பட்டது.

### திண்டுக்கல்

விலைவாசி உயர்வு எதிர்ப்புக் கூட்டம் எஸ். பி. லால் திடலில் நகராட்சி மன்ற உறுப்பினர் தோழர் கம்பர் ஆறுமுகம் தலைமையில் நடைபெற்றது. திண்டுக்கல் தொழிலாளர் தலைவர் தோழர் எஸ். ஏ. தங்கராஜ் செங்கொடி ஏற்றிவைத்துப் பேசினார். மதுரை மாவட்ட கம்யூனிஸ்ட் கட்சி தலைவர் தோழர் வி. மதனகோபால் விலைவாசி உயர்வைக் கண்டித்துப் பேசினார்.

### திருமங்கலம்

ச மேலப்பட்டி கட்சிக் கிளையின் சார்பில் உணவு இயக்கப் பொதுக்கூட்டம் நடைபெற்றது. தாலூகா கமிட்டி உறுப்பினர் தோழர் துரைசாமி பேசிய பின்னர், தமிழ்நாடு விவசாய சங்கத் தலைவர் தோழர் ஆர். ராமராஜ் பேசினார்.

தோழர் ராமராஜ் பேசுகையில் விலைவாசி உயர்விற்கு அரசாங்கத்தின் உணவுக் கொள்கைதான் காரணமென்றும், உற்பத்தி பெருகியும் விலைவாசி உயர்ந்திருக்கிறதென்றும், விலைவாசி உயர்வை எதிர்த்து சர்வகட்சியினரும் ஒன்றுபட்டுப் போராட வேண்டுமென்றும் கேட்டுக் கொண்டார்.

### திருச்செங்கோடு

திருச்செங்கோடு 2-வது வார்டு சூரியம் பாளையத்தில் அக். 8ல் நடைபெற்ற கம்யூனிஸ்ட் கட்சிப் பொதுக் கூட்டத்தில் தோழர் கே. சண்முகம் தலைமையில், தோழர்கள் எஸ். ஏ. நடேசன், கே. பழனியப்பன், எஸ். ஏ. நாச்சிமுத்து, அருணகிரி, டி. ஏ. சுப்பையன், வி, ராமசாமி ஆகியோர் காங்கிரஸ் சர்க்காரின் ஜன விரோதக் கொள்கைகளைக் கண்டித்துப் பேசினர்.

### வேலூர் (சேலம்)

ராஜவாயக்கால் வெற்றிலை உற்பத்தியாளர்களின் மார்க்கெட்டிங் சொஸைடி சார்பில் நாமக்கல் விற்பனைவரி அதிகாரியிடம் சமர்ப்பித்த ஒரு மனுவில், அச்சங்கத்தினர் தங்களுடைய வெற்றிலைக்கு விற்பனை வரியிலிருந்து விலக்குக் கொடுக்குமாறு கேட்டுக் கொண்டனர்.

### பெரியகுளம் தாலுகா கட்சிக் கிளை காரியதரிசிகள் கூட்டம்

உத்தமபாளையம், நவ. 5—

பெரியகுளம் தாலூகா கம்யூனிஸ்ட் கட்சிக் கிளை செயலாளர்கள், நிர்வாகக் குழு உறுப்பினர்கள் கூட்டம் தோழர் அய்யாக்கண்ணு தலைமையில் நடைபெற்றது. தாலூகா கமிட்டி செயலாளர் தோழர் ஏ. அப்துல் வஹாப் இன்றைய அரசியல் நிலை குறித்துப் பேசினார். உணவு இயக்கம் பற்றி தோழர் பி. உசேன் மீர் பேசினார்.

### தோழர் ராமராஜ்

தமிழ்நாடு கம்யூனிஸ்ட் கட்சிக் கவுன்சில் உறுப்பினரும், மதுரை மாவட்ட விவசாய சங்கத் தலைவருமாகிய தோழர் ஆர். ராமராஜ் விலைவாசி உயர்வை எதிர்த்து சகல கட்சிகளும் அணிதிரண்டு, சர்வகட்சிக் கமிட்டி அமைத்துப் போராட வேண்டிய அவசியம் பற்றியும், விலைவாசி உயர்வு, உணவு இயக்கத்தின் இன்றைய இன்றியமையாத தேவை குறித்தும் விளக்கிப் பேசினார். கட்சியின் எதிர்கால வேலைகள் பற்றியும் விவாதிக்கப்பட்டது.

## குறைந்த வாடகை வீடுகளுக்கு வரி விலக்கு

### காசநோய் தடுப்பு நிலையம் கட்ட முடிவு

### மதுரை நகரசபையில் நிறைவேறிய தீர்மானங்கள்

மதுரை, நவ. 10—

இன்று மாலை மதுரை நகர சபைக் கவுன்சிலின் சாதாரணக் கூட்டம் ஒன்று நகரசபைத் தலைவர் திரு. எஸ். தேவசகாயம் தலைமையில் நடைபெற்றது.

முன்னாள் நிதியமைச்சரான டாக்டர் ஜான் மத்தாய் அவர்கள் மறைவிற்கு இரங்கல் தெரிவிக்கும் தீர்மானமும், ஏழிசை மன்னன் திரு. தியாகராச பாகவதரின் மறைவுக்கும், முன்னாள் நகரசபை உறுப்பினர் திரு. முத்துக்கனி நாடார் ஆகியோரின் மறைவுக்கும் அஞ்சலி தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

#### காச நோய் தடுப்பு நிலையம்

ஆண்டுதோறும் கணக்கற்ற மக்கள் காச நோயினால் அவதிப்பட்டு மடிகிறார்கள். இதற்குக் காரணம் காச நோய் தடுப்பு நிவாரணம் சரிவர இல்லாததால்தான். ஆகையால் உடனே காசநோய் தடுப்பு நிலையம் ஒன்று உடனடியாக நகர சபையால் ஏற்படுத்தி ஏழை மக்களுக்கு உதவ வேண்டும். காச நோயால் அவதிப்படும் நகர சபை சிப்பந்திகளுக்கு எக்ஸ்ரே நிலையத்தில் இலவச சிகிச்சைக்கு ஏற்பாடு செய்ய வேண்டும். இத்தீர்மானத்தை திரு. எஸ். பி. ஆண்டி (கம்யூனிஸ்ட்) கொண்டுவந்து ஏகமனதாக நிறைவேற்றப்பட்டது.

#### வாடகை மாதம் 5 ரூபாய் உள்ள வீடுகளுக்கு வரி விலக்கு

"மதுரை நகர சபையில் ஜில்லா முனிசிபல் ஆக்ட் 83-ல் 5-ல் 1-ன் படி ரூ. 18 ஆறு மாத வாடகை மதிப்புள்ள வீடுகளுக்கு விதி விலக்கு அளிக்கப்பட்டு வருகிறது. ஆனால் நகரத்தின் வாடகை மதிப்பின் தரம் உயர்ந்து உள்ளபடியால் ஏழை மக்கள் குடியிருக்கும் சிறிய வீட்டிற்கும் வரி விதிக்கப் பட்டு கஷ்டப்படுகிறார்கள் ஆகையால் ஏழை மக்கள் வசிக்கும் சிறிய வீடுகளின் மாத வாடகை ரூ. 5 அல்லது ஆறு மாத வாடகை ரூ 30 உள்ள வீடுகளுக்கு வரி விதிவிலக்களிக்க வேண்டும்."

மேற்படி தீர்மானத்தை திரு. எஸ். பி. ஆண்டி கொண்டுவந்து ஏகமனதாக நிறை வேற்றப்பட்டது.

#### நகர பஸ் நிலையக் கட்டணத்தை உயர்த்துக

"நகர் அபிவிருத்திக்காக நகர சபையின் வருவாயை அதிகரித்து நிதி வசதியைப் பெருக்க வேண்டியிருப்பதால் வெளியூர் பஸ்களுக்கும், சிட்டி பஸ்களுக்கும் பஸ் ஒன்றுக்கு நகரசபை பஸ் நிலைய கட்டணம் நாள் ஒன்றுக்கு 8 அணு என்று இருப்பதை சிட்டி பஸ்கள் நகர எல்லைக்குட்பட்ட சாலைகளை அதிகமாக உபயோகித்தாலும்; வெளியூர் பஸ்கள் நகருக்கு வெளியில் பல பஸ் நிலையங்களுக்கு கட்டணம் செலுத்துவது போல் செலுத்த வேண்டியது இல்லாதிருப்பதாலும், சிட்டி பஸ்களுக்கு நகர சபை "பஸ்நிலையக் கட்டணம்" பஸ் ஒன்றுக்கு நாள் ஒன்றுக்கு 1 ரூபாய்வீதம் விதித்து வசூலிக்க வேண்டும் என்ற தீர்மானமும் திரு. எஸ். அலாவுதீன் கொண்டுவந்த தீர்மானமும் நிறைவேற்றப்பட்டன.

#### ஹையர் எலிமெண்டரி பாடசாலை அமைப்பு

மற்றும் மதுரை நகர் 1வது வார்டு திருவாப்புடையார் கோவில் 1 நீர். ஆரம்பபாடசாலையை ஹையர் எலிமெண்டரி ஸ்கூலாக மாற்றும்படி திரு. சோ. கருப்பையா (கம்.) கொண்டு வந்த தீர்மானமும், மதுரை நகர் எல்லையில் நகருக்கு வரும் பிரயாணிகளை வரவேற்கும் முறையில் வரவேற்பு சொற்களும், மறுபக்கம் நன்றி தெரிவிக்கும் சொற்களும், எழுதப்பட்ட போர்டுகள் அமைக்க வேண்டுமென்ற தீர்மானமும், மதுரை நகர பஸ் ஸ்டாண்டில் ஒரு பெரிய உணவு விடுதியைக் கட்ட வேண்டுமென்றும் அதற்கு சர்க்காரிடமிருந்து ரூ. 45 ஆயிரம் கடன் கேட்பதென்றும், வடக்காவணி மூல வீதி மார்க்கெட்டை விரிவு படுத்த ஒரு ஆலோசனைக் குழு ஏற்படுத்தப் பட்டது. அதில் நகரசபைத் தலைவர், எஸ். காமராஜ், எஸ். முத்து, ரெங்கசாமி, பாலகிருஷ்ணன் ஆகியோர் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

#### ரகசிய ஆடு அறுப்பவர் மீது நடவடிக்கை

மதுரை நகரில் லைசென்சு பெற்ற மட்டன் ஸ்டால் 42ம், லைசென்சு பெறாத மட்டன் ஸ்டால் 47ம் இருக்கிறதென்றும், மறைவாக ஆடுகள் அறுக்கிறவர்கள் மீது நடவடிக்கை எடுக்கப் பட்டு வருகிறது என்று நகர சபைத் தலைவர் திரு. தேவசகாயம், திரு. சோ. கருப்பையா(கம்) கேட்ட கேள்விக்குப் பதிலளித்தார்.

—ந, கி,

### வைத்திய மனையிலிருந்து திரு. ப. ரா. வந்தார்

சென்னை, நவ. 9—

நெல்லை நகர மன்றத்தில் 8 ஆண்டு காலமாகத் தலைவராக இருந்த திரு. ப. ராமஸ்வாமி கடந்த 16 நாட்களாக ராயப்பேட்டை அரசாங்க வைத்திய சாலையில் தங்கியிருந்து சிகிச்சை பெற்று, இன்று வெளியே வந்தார் 2-11-59 அவருக்குச் சிறிய ஆப்பரேஷன் செய்யப்பட்டது.

### தாரா நல்லூர் குடிசை வாழ்வோர் சங்கம்

தாராநல்லூர், நவ. 8—

தாரா நல்லூர் குடிசை வாழ்வோர் குடியிருப்பு மனை பாதுகாப்பு சங்கத்தை தோழர் கே. அனந்தநம்பியார் திறந்து வைத்தார். விழாவிற்குத் திரு. ஏ. முத்துக் கவுண்டர் தலைமை வகித்தார். தோழர்கள் கே. பி. எஸ். கோன், சி. பிச்சை ஆகியோர் குடிசை வாழ்வோர் உரிமைப்பற்றிப் பேசினார்கள்.

### தென் இந்திய ஆதிதிராவிட மகாஜன சங்கம்

பம்பாய், நவ. 5—

பம்பாய் தென் இந்திய ஆதிதிராவிட மகாஜன சங்கத்தின் மாகாணத்திர செயற்குழுக் கூட்டம் 15-10-59ல் நடைபெற்றது.

சங்கத்தால் நடத்தப்பட்டு வரும் இலவச ஆங்கிலம்-இந்தி இரவுப் பள்ளியின் முதல் ஆண்டு விழாவை நவம்பர் இறுதியில் சிறப்பாக நடத்துவதென்று முடிவு செய்யப்பட்டது.

### வித்யார்த்தி பரிஷத் கூச்சல்

புதுடெல்லி நவ. 11—

இந்தியப் பாதுகாப்புத் துறை மந்திரி வி. கே. கிருஷ்ணமேனன் மீது மக்களுக்கு நம்பிக்கை இல்லை என்றும் அவர் தமது பதவியிலிருந்து விலகிவிடவேண்டும் என்றும் அகில பாரதீய வித்யார்த்தி பரிஷத்தைச் சேர்ந்த சிலர் பிரதமர் நேரு மாளிகை முன் கூக்குரலிட்டனர்.

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

வர் ஐசனோவர் இந்தியாவிற்குச் செல்லும்பொழுது எல்லா விஷயத்தில் இந்தியாவிற்கு அமெரிக்காவின் தார்மீக ஆதரவைத் தெரிவிப்பார். சீனத் துருப்புக்களை வெளியேற்ற நேரு அமெரிக்க ராணுவ உதவியைக் கோரமாட்டார்'' என்றும் எழுதியுள்ளது ?

## நடக்க இருப்பவை

### ஈரோடு தாலுகாவில் உணவு இயக்கப் பொதுக்கூட்டங்கள்

15-11-59 பெருந்துறை: ஆயிக்கவுண்டம்பாளையம், எம். ஜோதிநாத், எஸ். பி. வெங்கடாஜலம் எம். சி.

16-11-59 சித்தோடு: எஸ். கிருஷ்ணன் பி. ஏ. பி. எல்., ரா. ஆறுமுகம், வி. சவுரிமுத்து எம். சி.

17-11-59 சிங்களூர்: எம். ஜோதிநாத், எஸ். பி. வெங்கடாஜலம் எம். சி., கே. ராமலிங்கம்.

17-11-59 லக்காபுரம் புதூர்: கே. எஸ். நாச்சிமுத்து, ரா. ஆறுமுகம், எஸ். கிருஷ்ணன் பி. ஏ. பி. எல்., சி. ஆர். நடேசன்.

21-11-59 பெருந்துறை: கே. எஸ். நாச்சிமுத்து, எஸ். கிருஷ்ணன் பி. ஏ. பி. எல்., எம். ஜோதிநாத்.

15-11-59-ந் தேதி மாலை 6 மணிக்கு ஜெயங்கொண்டம் காந்தி பூங்கா மைதானத்தில், டாக்டர் தங்கராஜ் தலைமையில் கம்யூனிஸ்டுக் கட்சிப் பொதுக் கூட்டம் நடைபெறும். அது சமயம் தோழர்கள் யு.பி. பாப்பா, சுந்தரி, ஏ. ஆர். சீனிவாசன் முதலியவர்கள் பேசுவார்கள்.

### திருச்செந்தூர் தாலுகாவில் உணவு இயக்க பொதுக்கூட்டம்

15-11-59 உடன்குடி எஸ். வெள்ளச்சாமி, குலசை இளவரசு.

16-11-59 ஆறுமுகநேரி எஸ். வெள்ளச்சாமி, எஸ். ஜே. பாலசிங்.

17-11-59 குரும்பூர். எஸ். எஸ். மாணிக்கம், எம். சுப்பையா.

17-11-59 ஆழ்வார் திருநகரி பி. ஐசக், குலசை இளவரசு.

18-11-59 குலசேகரன் பட்டினம் எஸ்.வெள்ளச்சாமி அலிஉதுமான்

19-11-59 பாமன்குரிச்சி எஸ். பூவலிங்கம், குலசை இளவரசு

20-11-59 திருச்செந்தூர் எஸ். வெள்ளச்சாமி, பி. ஐசக்.

21-11-59 சாத்தான்குளம் எஸ். பூவலிங்கம், எஸ். ஜே. பாலசிங், எஸ். வெள்ளச்சாமி.

22-11-59 உடன்குடி எஸ். வெள்ளச்சாமி, ஏ. பிச்சமுத்து ஆகியோர் பேசுவது என்று நிர்ணயம் செய்யப்பட்டுள்ளது.

## மார்க்கெட் நிலவரம்

### தங்கம், வெள்ளி

சென்னை, நவ. 13—

| | |
|---|---|
| சவரன் | ரூ. 82- 4 0 |
| தங்கம் (ரெடி) | ரூ. 126-14-0 |
| மூசை தங்கம் | ரூ. 124 6 0 |
| வெள்ளி 100 தோலா எடை | ரூ. 214- 0 |
| வெள்ளி 1ரூ.எடை | ரூ. 2- 3 0 |

### மணிலா பயறு

| | |
|---|---|
| 531 ராத்தல் கொண்ட பாரம் 1-க்கு (விற்பனை வரியுடன்) புது ''பட்டாணி'' | 175-00 |

### மணிலா எண்ணெய்

500 ரா. கொண்ட பாரம் 1-க்கு எக்ஸ்பெல்லர் ரெடி மதராஸ் கிடங்கு டெலிவரி (3 F.F.A) (மொத்த விலை) ரெடி

| | |
|---|---|
| | ரூ. 345-00 |
| நவம்பர் | ரூ. 344-00 |
| டிசம்பர் | ரூ. 333-50 |
| ஜனவரி | ரூ. 332-00 |

### விளக்கெண்ணெய்

| | |
|---|---|
| 500 ரா. பாரம் 1 க்கு (மதராஸ் கிடங்கு டெலிவரி) திருப்பத்தூர் | ரூ. 330 00 |

### தேங்காய் எண்ணெய்

87 ரா. கொண்ட பாரம் 1-க்கு கொல்லம் சரக்கு

| | |
|---|---|
| எம். எஸ். மார்க்கு | 43 00 |
| அம்பு மார்க்கு | 41 00 |
| ராஜா மார்க்கு | 41 00 |

### கடலை புண்ணாக்கு

| | |
|---|---|
| ''எக்ஸ்பெல்லர்'' (16 ரா.) | 24 70 |
| மு | 25- 0 |

ஜனசக்தி அச்சகத்தில் அச்சிட்டு, வெளியிட்டவர் எஸ். இருளாண்டி... ஆசிரியர்: ப. ஜீவானந்தம். ... 33, பிராட்வே, சென்னை-1. Janasakthi Broadway, Madras-1.

## அங்கமாலி கலவர வழக்கு

### டிச. 3ல் விசாரணைக்கு எடுத்துக்கொள்ளப்படும்

ஆல்வாய், நவ. 12—

சென்ற ஜூன் 13ல் அங்கமாலி போலீஸ் ஸ்டேஷனைத் தாக்கிக் கலகம் விளைவித்ததாகத் தொடரப்பட்டுள்ள வழக்கு எர்ணாகுளம் ஜில்லா மாஜிஸ்திரேட் முன் டிச. 3ல் விசாரணைக்கு எடுத்துக்கொள்ளப்படும்.

குற்றம் சாட்டப்பட்டவர்கள் செஷன்ஸுக்கு அனுப்பப்படுவதற்கு முன்பு வழக்குக்கான முகாந்தரம் இருக்கிறதா என அவர் விசாரிப்பார்.

இவ்வழக்கு இன்று விசாரணைக்கு எடுத்துக்கொள்ளப்படுவதாக இருந்தது. சர்க்கார் தரப்பு சாட்சியங்கள் மீதான குறிப்புகளை வழங்க 'பிராஸிகூஷன்' இன்று தயாராக இல்லை. எனவேதான் வழக்கு டிச. 3ல் விசாரணைக்கு எடுத்துக்கொள்ளப்படுகிறது.

கலைக்கப்பட்ட அசெம்பிளியின் காங்கிரஸ் எம்.எல்.ஏ.யான எம்.ஏ. அந்தோணி உட்பட 82 பேர் இவ்வழக்கில் குற்றம் சாட்டப்பட்டிருக்கின்றனர்.

## பினமி கம்பெனி பெயரால் அரசாங்கத்தை ஏமாற்ற முனைந்ததாக வழக்கு

### செஷன்ஸிற்கு 'கமிட்' செய்யப்பட்டது

சென்னை, நவ. 12—

ஜார்ஜ் டவுன் மாஜிஸ்ட்ரேட் திரு. எஸ். வரதராஜன், தொழில் வர்த்தக டைரக்டர் இலாகாவின் சிறு கைத்தொழில் பிரிவில் தலைமை குமாஸ்தாவாகப் பணியாற்றிய ஜி. ஆதிசேஷ ராஜு என்பவர் மீதும் இதர ஏழுபேர் மீதும் சுமத்தப்பட்ட வழக்கை விசாரித்து, செஷன்ஸிற்கு கமிட் செய்துள்ளார்.

வழக்கின் விபரமாவது.

ஆதிசேஷ ராஜுவும் இதர ஏழு பேர்களும் 19 7 ஏப்ரல் 1958 ஏப்ரலுக்கு மிடையே சென்னை அரசாங்கதை ஏமாற்றும் எண்ணத்தில் பினாமி கம்பெனிகளின் பெயரை பட்டியலில் சேர்த்தார்கள் என்று வழக்குத் தொடரப்பட்டது.

வழக்கை விசாரித்த மாஜிஸ்ட்ரேட் திரு. வரதராஜன், பியூன் லாசரஸ் என்பவர் மீதுள்ள வழக்கைத் தவிர இதரர்களின் விசாரணையை செஷன்சிற்கு கமிட் செய்தார்.

## பி. டி. ஐ. ஊழியர்கள் நவ. 23ல் வேலைநிறுத்தம் செய்வதாகப் பிரகடனம்

இந்தூர், நவ. 12—

பிரஸ் டிரஸ்ட் ஆப் இந்தியா (பி. டி. ஐ.) எம்ப்ளாயீஸ் யூனியன் தங்களுடைய கோரிக்கைகளுக்காக நவம்பர் 22 23 நள்ளிரவிலிருந்து 7 நாட்கள் வேலைநிறுத்தம் செய்வதென முடிவு செய்துள்ளனர்.

பி.டி.ஐ. டைரக்டர்கள்போர்டு தலைவரான திரு. ஏ. டி. மணி வெளியிட்டுள்ள ஒரு அறிக்கையில் இந்த வேலைநிறுத்தம் நியாயமானதில்லை என்று கூறியுள்ளார்.

## ஆர். எஸ். பி. மத்தியக் கமிட்டிக் கூட்டம்

கொல்லம், நவ. 12—

புரட்சிகர சோஷலிஸ்ட் கட்சியின் (ஆர். எஸ். பி.) மத்தியக் கமிட்டி நவம்பர் 18 முதல் 21 வரை டில்லியில் கூடும், என்று ஆர். எஸ். பி.யின் கேரள ராஜ்யத் தலைமை அலுவலகம் இன்று இங்கு அறிவித்தது.

வரப்போகும் கேரளத் தேர்தலில் ஆர். எஸ். பி.யின் நிலை, இந்திய அரசியல் நிலை ஆகியவை பற்றி அக்கூட்டத்தில் விவாதிப்பார்களாம்.

## ஸ்ரீ நாராயணக் கல்லூரி மூடப்பட்டது

### மாணவர் சங்கத் தலைவர் உண்ணாவிரதம் 2-வது நாள்

கொல்லம், நவ. 12—

ஸ்ரீ நாராயண கல்லூரியின் முதல்வர் காலவரையறையின்றி கல்லூரி மூடப்படுவதாக இன்று அறிவித்தார். தனியார் துறையில் நிருவகிக்கப்படும் இக்கல்லூரியில் பெருவாரியான மாணவர்கள் இன்று வகுப்பிற்கு செல்லாததினால் இவ்வறிவிப்பு வெளியிடப்பட்டதாம். மாணவர் சங்கத் தலைவர் இரவிகுளம் பாஸி காலவரையற்ற உண்ணாவிரதம் ஆரம்பித்து இன்று இரண்டாவது நாளாகும். கல்லூரியிலிருந்து வெளியேற்றிய 5 மாணவர்களை கல்லூரிக்கு அழைக்க வேண்டுமென்றும், 31 மாணவர்களுக்கு கொடுத்த சஸ்பெண்டு ஆர்டர்களை பின்வலிக்க வேண்டுமென்ற கோரிக்கைகளுக்காக அவர் உண்ணாவிரதம் ஆரம்பித்தார்.

மூன்று வாரங்களுக்கு முன்னால் மாணவர்களால் நடத்தப்பட்ட அபராத எதிர்ப்பு போராட்டத்தில் பங்கு கொண்டார்கள் என்ற காரணத்திற்காக கல்லூரி நிர்வாகத்தினர் இவர்கள் மீது நடவடிக்கை எடுத்தார்களாம். —பி.டி.ஐ.

# நெல், அரிசி போக்குவரத்து தடை நீக்கம்

## சென்னை சர்க்கார் சம்மதித்துவிட்டதாம்

### இனி கேரளத்திற்கு தாராளமாக குறுவை அரிசி செல்லலாம்! அமைச்சர் பக்தவத்சலம் தகவல்

சென்னை, நவ. 12—

சென்னை ராஜ்யத்திலிருந்து நெல், அரிசி ஆகிய உணவுப் பொருள்கள், தான்யங்கள் தென் உணவு மண்டலத்தின் வேறு ராஜ்யங்களுக்குப் போவதில் யாதொரு தடையும் கட்டுப்பாடும் வேண்டியதில்லையென்றும் இப்பொழுதுள்ள கட்டுப்பாடுகளை ரத்து செய்யலாமென்றும் சென்னை சர்க்கார் இந்திய சர்க்காருக்குத் தெரிவித்துள்ளனர், என்று சென்னை உணவு அமைச்சர் திரு. எம். பக்தவத்சலம் இன்று செய்தி நிருபர்களிடம் தெரிவித்தார்.

இதனடிப்படையில் இந்திய சர்க்கார் உத்திரவு பிறப்பிக்க வேண்டும் என்றும் அவர் கூறினார்.

கொள்முதல் செய்வதை நிறுத்திவிட்டதை தொடர்ந்து கேரளத்திற்கு அரிசி போகக் கூடாது என்று சென்னை சர்க்கார் விதித்திருந்த தடைக்கு அவசியம் இல்லை என்று இப்போது கருதப்படுகிறதாம்.

குறுவை நெல், அரிசியைச் சென்னை சர்க்கார் கொள்முதல் செய்யவில்லை என்றும் இது தாராளமாகக் கேரளாவிற்குப் போகலாமென்றும் அவர் கூறினார். சர்க்காரே கொள்முதல் செய்யவில்லை என்றும், ஆயினும் நியாயவிலை அரிசிக் கடைகள் நீடிக்கவேண்டுமென்றும் இதற்காக இந்திய சர்க்கார் போதிய அரிசி சப்ளை செய்யவேண்டுமென்றும், இம்மாதக் கடைசியில் தாம் டில்லிக்குச் செல்லும்போது இதுபற்றி மத்திய சர்க்காரிடம் நன்கு உறுதிப்படுத்திக்கொள்ளப் போவதாகவும் அமைச்சர் பக்தவத்சலம் தெரிவித்தார்.

டில்லி விஜயத்தின்போது தென் உணவு மண்டலத்தின் எதிர்காலம் பற்றியும் மத்திய உணவு மந்திரி திரு. எஸ். கே. பட்டீலுடன் விவாதிக்கப் போவதாயும், தற்போதைய மண்டல ஏற்பாடு நீடித்தால் நியாயவிலைக் கடைகளுக்கு வேண்டிய அரிசி சப்ளையை மத்திய சர்க்கார் கொடுக்க வேண்டுமென்றும், ஏனெனில் ராஜ்யத்தில் கொள்முதல் இருக்கமுடியாது, என்றும் அவர் கூறினார்.

(குறிப்பு: முன்பு கேரளத்தில் கம்யூனிஸ்ட் ஆட்சி இருந்தபோது கேரளத்திற்கு அரிசி செல்வதால் தான் தமிழ் நாட்டில் விலை உயர்வதாகக் காங்கிரஸ் அமைச்சர்கள் உட்படப் பலர் (கம்யூனிஸ்ட்-எதிர்ப்பாளர்கள்) கூச்சல் போட்டதை வாசகர்கள் அறிவர். இப்பொழுது கேரளத்திற்கு தாராளமாகக் குறுவை அரிசி போகலாம் என்று அமைச்சர் பக்தவத்சலம் கூறுவது, அங்கு கம்யூனிஸ்ட் ஆட்சி ஒழிக்கப்பட்டுவிட்டதினால் தானோ? - (ஆ-ர்)

## முஸ்லீம் லீக்கின் அவசியத்தை காங்கிரஸ் உணருகிறது

### லீக் தலைவருக்கு பூரண திருப்தி

ஆமதாபாத், நவ. 12—

அடுத்த பொதுத் தேர்தலில் முஸ்லீம் லீக் தீவிரப்பங்கு பற்றும் என இந்திய யூனியன் முஸ்லீம் லீக் தலைவர் முகம்மது இஸ்மாயில் அறிவித்தார். லீகைப் ''புனர் நிர்மாணம்'' செய்வதற்காகப் பல்வேறு மாநிலங்களிலும் சுற்றுப் பயணம் செய்துவரும் இஸ்மாயில் இன்று நிருபர் மாநாடொன்றில் பேசினார்.

''கம்யூனிஸத்துக் கெதிரான போராட்டத்தில் காங்கிரஸ் கட்சியுடன் சேர்ந்து நிற்கும் லீகின் உபயோகத்தைப் பெரும்பான்மையான காங்கிரஸ் தலைவர்கள் உணர்ந்திருக்கின்றனர். பழைய நினைவுகளை வைத்துக்கொண்டுள்ள நேரு போன்ற சிலர்தான் முஸ்லீம் லீகுக்கெதிரான எண்ணம் கொண்டுள்ளனர்'' என அவர் கூறினார். குறுகிய காலத்தில் லீகைப் பலம் பொருந்திய ஸ்தாபனமாக உருவாக்க முடியும் என அவர் கூறினார்.

கேரளத்தில் ''கூட்டு'' உருவாக்க காங்கிரஸை லீக் அணுகவில்லை என்றும் முஸ்லீம் லீகும் ஒரு சக்திதான்; அதை நேரான வழியில் வளர்க்கமுடியும் என்ற ''சரியான'' முடிவுக்குக் காங்கிரஸ்காரர்கள்தான் வந்தனர் எனவும் அவர் கூறினார்.

## ''தெற்கு'' வளர வெளிநாட்டு உதவி

சென்னை, நவ. 12—

வெளிநாட்டு உதவியுடன் நடைபெறும் திட்டங்களை இன்னும் திறமையாக நடத்த தென் ராஜ்ய சர்க்கார்களிடையே விரைவில் ஆலோசனை நடைபெறும்.

இன்று கேரளா, சென்னை, மைசூர் ராஜ்ய பிரதிநிதிகளின் பூர்வாங்கக் கூட்டம் நடைபெற்றபோது தொடர்ந்து ஆலோசனை நடத்தும் முடிவு எடுக்கப்பட்டது

விவசாயம், கால்நடை, காடுகள், மீன் இலாகா, பால்பண்ணை முதலிய பல துறைகளில் வெளிநாட்டு உதவி இருந்து வருவது தெரிந்ததே. சோவியத் உதவியோடு நெய்வேலியில் மின்சார உற்பத்தி நிலையம் ஏற்பட்டு வருவது தெரிந்திருக்கலாம்.

# எல்லைச் சம்பவங்களை பயன்படுத்த விரும்பும் சிறுபிள்ளைத்தனம்

## சில அரசியல் கட்சிகளின் போக்குக்கு நேரு கண்டனம்

இந்தூர், நவ. 12—

''நாகபுரி காங்கிரஸ் தீர்மானங்கள் மீது சில அரசியல் கட்சிகள் தாக்குதல்கள் தொடுத்திருக்கின்றன. இத்தாக்குதல்கள் இப்பொழுது புதிய முறையில் நடத்தப்படுகின்றன. இந்திய-சீன எல்லைச் சம்பவங்களுக்குப் பிறகு, காங்கிரஸ் சீர்குலைந்துவிட்டதெனவும் எல்லை நிலைமையைச் சமாளிக்க முடியாமல் காங்கிரஸ் பயந்துவிட்டதெனவும் அவைஒரு இயக்கத்தை ஆரம்பித்துள்ளன. இந்த அரசியல் கட்சிகள் காங்கிரசை கேவலப்படுத்தி, தாம் மட்டுமே இந்தியாவை வெளி அபாயத்திலிருந்து காக்கும் தைரியம் படைத்தவை எனக் கூறுகின்றன.

இப்பொழுது பெருங் கூச்சல் போடும் இவர்கள் தேசிய இயக்கத்தின்போது வெளிவரவில்லை. ஆனால் திரை மறைவில் ஒளிந்து கொண்டிருந்தனர். இது பெரிய வேடிக்கைதான்; எல்லைப் பிரச்சினையைப் பயன்படுத்தும் சிறுபிள்ளை விளையாட்டை என்னவென்றழைப்பது?'' எனப் பிரதமர் நேரு கூறினார். இன்று காங்கிரஸ் ஊழியர்கள் கூட்டத்தில் பேசினார். அவர் மேலும் பேசுகையில் நாகபுரித் தீர்மானங்களை காங்கிரஸ் நிறைவேற்றியபின் எதிர்க்க ஆரம்பித்தவர்கள் இப்பொழுது இந்தியாவின் வெளிநாட்டுக்கொள்கை மீது தாக்குதல் தொடுத்திருக்கின்றனர் என்றார். தனது நடுநிலைமைக் கொள்கையை இந்தியா கைவிடவேண்டும் என வற்புறுத்தும் இவர்கள் நாட்டின் உள் விவகாரங்களிலும் இதே போக்கை அனுஷ்டிக்க விரும்புகின்றனர். காங்கிரசிடம் பல பலஹீனங்கள் உண்டு. இருப்பினும் அதற்கு ஓரளவு பலமிருக்கிறது. இதை எதிர்ப்பாளர்கள் உணரவேண்டும்'' என நேரு கூறினார். இறுதியில் நாகபுரி தீர்மானங்களை எதிர்க்கும் காங்கிரஸ்காரர்களுக்கு ஸ்தாபனத்தில் முக்கிய பொறுப்புகள் அளிக்கப்படாது எனவும் நேரு அறிவித்தார்.

## மே. பெர்லினில் அமெரிக்க ரேடியோ நிலையம்

### ரஷ்யா ஆட்சேபம்

மாஸ்கோ, நவ. 12—

மேற்கு பெர்லினில் அமெரிக்கா ஒரு ரேடியோ நிலையத்தை அமைப்பதற்கு சோவியத் ரஷ்யா ஆட்சேபம் தெரிவித்துள்ளது.

ஜெர்மன் ஜனநாயகக் குடியரசுக்கெதிராகச் சதிவேலைகள் செய்வதற்காகவே ஒரு வேற்று நாட்டில் அமெரிக்கா இந்த ரேடியோ நிலையத்தை ஏற்படுத்தியுள்ளது என்றும் சோவியத் யூனியன் அமெரிக்க ஸ்தானிகரிடம் சமர்ப்பித்துள்ள குறிப்பில் கூறியுள்ளது என்று டாஸ் அறிவித்தது.

## சூ யென்-லாயின் கடிதம்பற்றி நேரு

உஜ்ஜெயினி, நவ. 12—

சீனப் பிரதமர் சூ யென்-லாய் தனக்கு எழுதிய சமீப கடிதம் பரிசிலனை செய்யப்பட்டு வருகிறதென்றும், உரிய காலத்தில் அதற்கு பதில் அனுப்பப்படும் என்றும் பிரதமர் இன்று இங்கு 'சர்க்யூட் ஹவுஸி'ல் நிருபர்கள் கேட்ட கேள்வியொன்றிற்குப் பதிலளிக்கையில் கூறினார்.

## பரம்பிக்குளம் திட்டம் குறித்து பேச்சுவார்த்தை

### நவ. 14ந் தேதி நடக்குமாம்

திருவனந்தபுரம், நவ. 12—

பரம்பிகுளத் திட்டப் பொறுப்பிலிருக்கும் சென்னை அரசாங்க தலைமை என்ஜினியர் திரு. ஆனந்தராவ் திட்டத்தின் விபரங்கள் குறித்தும் இதர வேலைகள் குறித்தும் கேரள தலைமை என்ஜினியருடன், நவ. 14ம் தேதி பேச்சுவார்த்தை நடத்துவார். ஆரம்பத்தில் நவ. 5ம் தேதி பேச்சுவார்த்தை நடப்பதாகயிருந்தது. ஆனால் கேரள அரசாங்கம் மறுத்துவிட்டது. காரணம் இரு மாநிலங்களின் மந்திரிகள் தரப்பில் முதன் முதலில் ஏற்றுக்கொள்ளப்பட்டத் திட்டத்திலிருந்து தற்போது சமர்பிக்கப்பட்டிருக்கும் திட்டம் மாறுபட்டிருக்கிறது என்று கேரள அரசாங்கத் தரப்பில் கூறப்படுகிறது.

கேரள நீர்ப்பாசன இலாகாவைச் சேர்ந்த ஒருவர் கூறும்போது, மந்திரிகள் தரப்பில் ஒப்புக்கொள்ளப்பட்ட ஒப்பந்தத்தின் அடிப்படையில் பேச்சுவார்த்தை நடத்த சென்னை அரசாங்கம் இணங்கியுள்ளதாகக் கூறினார். (பி. டி. ஐ.)

## தேசியக் கவுன்சில் கூட்டத்திற்கு சென்றுள்ள தமிழ்நாடு தலைவர்கள்

சென்னை, நவ. 12—

இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் தேசியக் கவுன்சில் கூட்டத்தில் கலந்துகொள்ளும் தமிழ் நாட்டுப் பிரதிநிதிகள் தோழர் பி. ராமமூர்த்தி, தோழர் ப. ஜீவானந்தம், தோழர் பி. சீனிவாசராவ் தோழர் என். சங்கரையா கே. ரமணி ஆகியோர், தோழர் எம். ஆர். வெங்கட்ராமன் நவம்பர் 4-ம் தேதி முதல் 9-ம் தேதி வரை நடைபெற்ற மத்திய குழு கூட்டத்தில் கலந்துகொண்டு சென்னை திரும்பினர்.

தோழர் எம். கல்யாண சுந்தரம் எம். எல். ஏ. உடல் நிலை காரணமாக இந்தக் கூட்டத்தில் கலந்து கொள்ளவில்லை.

## கைதான இந்தியப் போலீஸ்காரர்கள்

### சீனு திருப்பிக்கொடுக்கும்

புதுடில்லி, நவ. 12—

இந்த வெள்ளிக்கிழமைக்கும் ஞாயிற்றுக் கிழமைக்கும் இடையில் எந்த நேரத்திலும் சீன எல்லைக் காவலர்கள், கடந்த மாதம் கைது செய்யப்பட்ட இந்தியப் போலீஸ்காரர்களைத் திருப்பிக்கொடுப்பதற்குத் தயாராக இருக்கிறார்கள், என்று சீன வெளிவிவகார அமைச்சர் இன்று பீகிங்கிலுள்ள இந்திய ஸ்தானிகர் திரு. ஜி. பார்த்தசாரதியிடம் தெரிவித்தார், என்று பீகிங் ரேடியோ ஒலிபரப்பியது. இந்திய போலீஸ்காரர்களைத் திருப்பிப் பெற்றுக்கொள்வது சம்பந்தமாக சீன, இந்திய எல்லைக்காவல் படையினரின் பிரதிநிதிகள் விவாதித்து முடிவுசெய்துகொள்ளலாம், என்றும் அந்த ஒலிபரப்புத் தெரிவித்தது.

இச் சம்பவங்களின் போது உயிரிழந்த 9 இந்தியர்களின் சடலங்களையும் அளித்துவிடச் சீனம் தயாராயிருப்பதாக இந்த அறிவிப்பு கூறுகிறது. இந்தியத் துருப்புகளிடமிருந்து கைப்பற்றப்பட்ட துப்பாக்கிகள், வெடி மருந்துகள் முதலியனவும் அச்சமயத்தில் திருப்பியளிக்கப்படும்.

## அமெரிக்கக் கம்பெனி கியூபாவில் தேசியமாக்கப்பட்டது

ஹவானா, நவ. 10—

அமெரிக்காவுக்குச் சொந்தமாக இருந்த கியூபா புகையிலைக் கம்பெனியை கியூபா நிலச்சீர்திருத்தக் கழகம் எடுத்து நடத்த நவ. 6-ந் தேதியன்று நடவடிக்கை மேற்கொண்டது. இக்கம்பெனிக்கு ஏராளமான புகையிலைத் தோட்டங்கள் இருக்கின்றன.

## பண்டார நாயகா கொலை வழக்கு

கொழும்பு. நவ. 11—

முன்னாள் இலங்கைப் பிரதமர் பண்டாரநாயகா கொலைசெய்யப்பட்டது சம்பந்தமாகத் தொடுக்கப் பெற்றுள்ள வழக்கை சர்க்கார் சார்பில் முன் சுப்ரீம் நீதிமன்றத்தின் நீதிபதி இ. எம். கிரேஷியன் நடத்துவார் என்று தெரிகிறது. குற்றம்சாட்டப்பட்டவர்கள் நவ. 30-ல் நீதிமன்றத்தில் ஆஜராக்கப்படுவார்கள்.

# ஆட்டம் ஆடி பாட்டுப்பாடி மக்களை மகிழ்விப்பர்!

## ஜெர்மன் ஜனநாயகக் குடியரசு கலைஞர்கள் விரைவில் விஜயம்

சென்னை, நவ. 12—

சென்னை நகர மக்களை ஆட்டம் ஆடி பாட்டுப்பாடி மகிழ்விக்க ஜெர்மன் ஜனநாயகக் குடியரசிலிருந்து கலைஞர்கள் கோஷ்டி ஒன்று இன்னும் இரண்டு தினங்களில் சென்னை வரும்.

இம்மாதம் 17, 18 தேதிகளில் ராஜா அண்ணாமலை மன்றத்தில் ஜெர்மன் கலைஞர்களின் நடனம் நடைபெறும்!

பிரபல சினிமா நடிகரும், கலைஞருமான ஹான்ஸ் பீட்டர் மெனிட்டி கலைஞர் கோஷ்டி விஜயத்திற்கு பூர்வாங்க ஏற்பாடுகள் செய்ய இன்று சென்னை வந்து சேர்ந்தார்.

ஜனசக்தி நிருபருக்கு அளித்த பேட்டியில் மெனிட்டி கூறியதாவது: இந்திய கலைஞர்கள் என்றால் ஜெர்மன் மக்களுக்கு ஒரு உற்சாகம் எப்போதும் உண்டு. ராஜ்கபூர் நடித்த படம், சத்யஜித் ரே ''டைரக்ட்'' செய்த படங்கள் என்றால் சர்வதேச மதிப்பு உண்டு; குறிப்பாக எங்கள் நாட்டில் அவர்கள் பெயர்கள் இன்று மிகவும் பிரபலமானவை.

இந்திய-ஜெர்மனி கூட்டுறவில் சினிமா படங்கள் தயாரிப்பது பற்றி நாங்கள் யோசித்து வருகிறோம். இந்தத் திட்டத்தை சிறிது விரிவான முறையில் இரு நாடுகளுக்கிடையே கலைஞர்களை பறிமாறிக்கொள்ளவும் பெரிதாக்க முடியும் என்று ஜனநாயகக் குடியரசு சர்க்கார் கருதுகிறது.

அடுத்த ஆண்டு ஆரம்பத்தில் எங்கள் நாட்டு சினிமாத் துறை தூதுகோஷ்டி ஒன்று இந்தியா வரும். அதே முறையில் இந்திய தூதுகோஷ்டியை வரவேற்க நாங்கள் விரும்புகிறோம்.

ஜெர்மன் ஜனநாயக குடியரசில் சினிமாத் துறை மக்களின் வளர்ச்சிக்கு ஆக்கபூர்வமான முறையில் உதவி செய்துவருகிறது. உளுத்துப்போன ''கண்டதும் காதல்'' கதைகளுக்கு எங்கள் நாட்டில் இப்போது மதிப்பில்லை. பாட்டாளி வர்க்கத்தோடு, வாழ்வோடு இணைந்த பிரச்னைகளை சோஷலிஸ பிரத்யட்ச நிலைமைக்கு ஒத்தவகையில் படம் பிடித்துக்காட்ட வல்லது எங்கள் கலைத்துறை. காதலுக்குக் கதைகளில் இடமே இல்லை என்று அர்த்தம் இல்லை. உயர்ந்த கருத்துகளை கௌரவமான முறையில் படம் பிடித்து காட்டுவதில் நாங்கள் முன்னணியில் நிற்கிறோம்!

பரத நாட்டியம் தென்னாட்டின் தலைசிறந்த கலை என்று கேள்விப்பட்டிருக்கிறோம். அதை காணவேண்டும் என்று எங்கள் நாட்டு கலைஞர்கள் விரும்புகிறார்கள் என்று மெனிட்டி கூறினார்.

## எஸ். கே. பட்டீல் டிட்டோ சந்திப்பு

பெல்கிரேட், நவ. 12—

இந்திய உணவு, விவசாய அமைச்சர் திரு, எஸ். கே. பட்டீல் இன்று யுகோஸ்லாவிய அதிபர் மார்ஷல் டிட்டோவை, பிரியோனி தீவில் அவரது இல்லத்தில் சந்தித்தார்.

திரு. எஸ். கே. பட்டீல் டிட்டோவின் விருந்தாளியாக இங்கு இரு நாட்கள் தங்குவார்.

# தவிர்க்க முடியாத உத்வேகத்தில் கொலை செய்தால் மன்னிக்கலாமா?

## சென்னை நீதி மன்றத்தில் ஒரு சட்டப் பிரச்சினை

சென்னை, நவ. 12—

பைத்தியம் பிடித்த ஒரு மனிதன் தன்னைமறந்த நிலையில் வேறு ஒரு நபரைக் கொலை செய்துவிடுகிறார். அவருக்குத் தண்டனை கொடுக்க வேண்டாம் என்பது இப்போதிருக்கும் சட்டம். சாட்சியங்கள் ''அவர் மூளை சரியாக இல்லை'' என்பது நிருபணம் ஆனால் அவரை விடுதலை செய்தோ ஆஸ்பத்திரிக்கு அனுப்பும்படியோ நீதிபதிகள் தீர்ப்பு கூறுவார்கள்.

### உத்வேகம் ஏற்பட்டால்

மூளை சரியாக இருக்கும். ஆனால் சில சமயங்களில் பலாத்காரத்தில் ஈடும்படும்படி ஏதோ ஒரு உத்வேகம் சிலருக்கு தோன்றக் கூடும்.

இந்த உத்வேகமும் ஒரு மனோவியாதியே. ஆனால் இது நிரந்தரமான வியாதியல்ல.

இம்மாதிரி உத்வேகம் ஏற்பட்டு பதினைந்து வயது பெண் ஒருத்தி ஒரு குழந்தையை கிணற்றில் எறிந்தாள். குழந்தை செத்துவிட்டது.

பெண் கைதுசெய்யப்பட்டாள். ஜில்லா நீதிபதி கொலைக் குற்றத்திற்காக பெண்ணிற்கு ஆயுள் சிறை தண்டனை விதித்தார்.

### ''மூளை சரியில்லை''

பெண்ணிற்கு மூளை சரியாக இல்லை என்று கூறப்பட்டதை ஏற்க ஜில்லா நீதிபதி மறுத்துவிட்டார். இதற்கு முன்னாலும் இரண்டு முறை குழந்தைகளை இந்தப் பெண் கிணற்றில்போட்டு கொல்ல முயன்றதை பெண் சார்பில் வக்கீல்கள் எடுத்துக் காட்டி பெண் சித்தஸ்வாதீனம் இல்லாதவள் என்பதை நிரூபிக்க முற்பட்டனர். ஆனால் ஜில்லா நீதிபதி இதை ஏற்கவில்லை.

### உயர்நீதிமன்றத்தில்......

உயர்நீதிமன்றத்திற்கு பெண்ணின் சார்பில் அப்பீல் செய்து கொள்ளப்பட்டது. இந்த வழக்கை நீதிபதிகள் அனந்தநாராயணனும், ராமசாமியும் விசாரித்து இன்று தீர்ப்புக் கூறினர்.

''இப்போதுள்ள சட்டப்படி ''உத்வேகத்தில் செய்யப்படும்'' கொலைகளுக்கு தண்டனையிலிருந்து விலக்கு அளிக்கப்படவில்லை என்றும் ஆகவே சட்டப்படி தண்டனை கொடுக்கப்பட்டிருப்பதாக நீதிபதிகள் கருதினர்.

இருந்தாலும் இந்தப் பெண் பரிதாபகரமான சூழ்நிலையில் இளம் வயதில் குற்றம் செய்திருப்பதால் தண்டனையை ரத்து செய்வது நியாயமே'' என்று நீதிபதிகள் தீர்ப்புக் கூறினர்.

இளம் பெண்கள் உஷார் பள்ளிக்கூடத்தில் இந்தப் பெண்ணை சேர்த்து, மன வியாதி நிபுணர்களைக் கொண்டு வைத்திய சிகிச்சை அளிக்க வேண்டும் என்றும் நீதிபதிகள் உத்தரவிட்டனர்.

இந்தத் தீர்ப்பின் மூலமாக ஒரு முக்கிய யோசனையையும் நீதிபதிகள் வெளியிட்டனர்.

''உத்வேகத்தில்'' நடைபெறும் கொலைகளில் குற்றவாளிகள் என்று கருதப்படுகிறவர்களுக்கு எந்த முறையில் கருணைகாட்ட முடியும் என்பதை சட்டக் கமிஷன் பரிசீலிக்க வேண்டும் என்று நீதிபதிகள் கூறினர்.

மன நூல், மன வியாதி நூல் குற்றவாளிகளைப் பற்றிய தனிச் சிறப்பு நூல்களை வக்கீல்கள், சட்டப் படிப்போடு சேர்த்துப்படிக்க வேண்டும் என்றும் நீதிபதிகள் கூறினர்.

## டிகால் பிரிட்டனுக்கு விஜயம் செய்வார்

பாரிஸ், நவ. 12—

பிரெஞ்சு ஜனாதிபதி சார்லஸ் டிகால், அடுத்த ஆண்டு ஏப்ரல் 5 முதல் 8 வரை உத்தியோகபூர்வமாக பிரிட்டனுக்கு விஜயம் செய்வார் என்று ராஜதந்திர வட்டாரங்கள் இன்று தெரிவித்தன.

## ஜெமினியில் கிளர்ச்சி

சென்னை, நவ. 12—

ஜெமினி ஸ்டுடியோ தொழிலாளர்கள் தங்களுடைய 8 வருட போனஸ், 5 வருட சம்பள உயர்வு முதலிய கோரிக்கைகளுக்காக தீவிரக் கிளர்ச்சி செய்து வருகிறார்கள். ஜெமினி அதிபரோ, அப்படி ஒன்றும் கொடுக்க முடியாதென்றும், ஏதோ இனாம் காசாக முப்பதோ நாற்பதோ கொடுப்பதாகவும் கூறுகிறார். தொழிலாளர் மத்தியில் பெரும் அதிருப்தி நிலவுகிறது.

## இன்றைய சினிமா

மதுரை: ஸ்ரீ லக்ஷ்மி–நவ்ரங்

மதுரை: பரமேஸ்வரி– மகாதேவி

மதுரை: ஸ்ரீ தேவி–அவள் யார்

மதுரை: சிட்டி சினிமா– அமர தீபம்

புதுக்கோட்டை: பழனியப்பா– பாகப் பிரிவினை

அரியலூர்: நடராஜா– காவேரியின் கணவன்

சோமனூர்: ஸ்ரீ குமார்–பெண் குலத்தின் பொன் விளக்கு

சிவகாசி: கனகலக்ஷ்மி– அவன் அமரன்

பொள்ளாச்சி: செல்வம்– பாகப் பிரிவினை

போடி: சென்ட்ரல்– வாழவைத்த தெய்வம்

## பையன் காணவில்லை



ஆறுபத்துல்லா என்று பெயர் உடைய 15 வயதுள்ள பையன் 14 10 59 பகல் 10 மணி முதல் காணவில்லை பையன் மாநிறம் ஒல்லியான தேகம், உயரம் சுமார் 4 அடி, லைட் மஞ்சள் கலர் ஸ்லாக்கும், லைட் பொடிக் கலர் புல்பேண்டும் அணிந்திருந்தான். பையனைக் கண்டு பிடித்துக் கொடுப்பவர்களுக்கு தக்க சன்மானம் கொடுக்கப்படும்.

இனியத் நீ வீட்டை விட்டுப் போனது முதல் நம குடும்பத்தார் எல்லோரும் சதா கவலையுடன் இருக்கிறோம். நீ எங்கிருந்தாலும் உடனே புறப்பட்டு வரவும்

A. S. இமாம் சாயபு, பர்கூர் ரோடு, அந்தியூர் P.O. (வயா) ஈரோடு, கோவை Dt.